சரவணபவாநந்த டாக்டர் ரேமு

# சித்தர் மரபு

## மற்றும் தத்துவம் பற்றிய நூல்





# சித்தர் மரபு

(சித்தர் தத்துவம் மற்றும்
சித்தர் மரபு பற்றிய நூல்)



சரவணபவானந்தா
டாக்டர் ரெ.மு.

சித்தக்கடல்
J-6, லாயிட்ஸ் காலனி,
அவ்வை சண்முகம் சாலை,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.

# சித்தர் மரபு

(சித்தர் தத்துவம் மற்றும்
சித்தர் மரபு பற்றிய நூல்)

சரவணபவானந்தா
டாக்டர் ரெ.மு.

வெளியீடு:

**சித்தக்கடல்**

J-6, லாயிட்ஸ் காலனி,
அவ்வை சண்முகம் சாலை,
இராயப்பேட்டை, சென்னை - 600 014

## Sithar Maraphu

Saravana Bavanantha
Dr. Rey. Mu

| | | |
|---|---|---|
| First Edition | : | 2008 |
| No. of Pages | : | 96 |
| Size of Books | : | 1/8 Demy |
| Paper used for text | : | 18.6 Maplitho |
| Printing Type | : | 12 points |
| Published by | : | **Sittakadal**<br>J-6, Lloyds Colony,<br>Avai Shanmugam Street,<br>Royapettah, Chennai - 600 014. |
| Printed at | : | Udhayam Offset, Chennai - 600 002. |
| Prince | : | Rs.50/- |

# சித்தர்கள் தத்துவம்

(வானொலியில் வந்த தேனொலி)



சரவணபவானந்தர்

டாக்டர் ரெ.மு

# சித்தர்களின் தத்துவம்

சரவணபவானந்தர்

## எல்லாம் வல்ல சித்தர்

ஆதி சித்தர், அகத்தியர். அவர் தந்த முத்தமிழே முடிந்த தத்துவமாகும்.

சித்தத்தை அடக்கியவர்களே சித்தர்கள்

சித்தம், உயிர் தத்துவம்.

அத்தன் இருப்பிடம் சித்தம்.

சித்தத்தை சிவன்பால் வைத்தவர்கள் சித்தர்கள்.

இறைவனுக்கு, ''எல்லாம் வல்ல சித்தர்'' என்று ஒரு பெயருண்டு. "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட, அத்தன் எனக்கு அருளியவாறு ஆர் பெறுவார் அச்சோவே!" என்று பாடினார் மாணிக்கவாசகர். சித்தி பெற்றவர்கள் சித்தர்கள். சித்துடையவர்களும் சித்தர்களே!

## அற்புதச் செயல்கள்

அணிமா-மகிமா-கரிமா-லகிமா-பிராத்தியம்-பிரகாமியம் ஈசத்துவம்-வசித்துவம் ஆகிய எட்டு வகையான அட்டமா சித்திகளும் கைவரப் பெற்றவர்கள் சித்தர்கள்.

1, துரும்பை மேருவாக்குவது!

2, மேருவைத் துரும்பாக்குவது!

3, ஒன்றும் இல்லாமற் செய்வது!

4, பல வகையாகச் செய்வது!

5, வேண்டுவன அடைவது!

6, எங்கும் செல்வது!

7, கூடுவிட்டுக் கூடு பாய்வது!

8, யாவையும் தன் வயமாக்குவது!

இவ்வாறாகச் செயற்கரிய அற்புதச் செயல்களைச் செய்பவர்கள் சித்தர்கள். அவர்களுக்குத்தான் "பெரியர்" என்று பெயர்.

*"செயற்கரிய செய்வர் பெரியர், சிறியர்*
*செயற்கரிய செய்கலா தார்"*

என்று சொல்லுவார் தெய்வப் புலவர், திருவள்ளுவர்.

## அப்பாற்பட்டவர்கள்

பக்தர்கள், யோகிகள், ஞானிகள் ஆகிய அத்தனை பேர்களுக்கும் அப்பாற்பட்டவர்கள் சித்தர்கள்.

அறிவான தேஜோமயத் தெய்வம் அவர்களின் சித்த மிசைக் குடிகொண்டுள்ளது.

*"சித்தசிகாமணியே! என் திருநட நாயகமே!"* என்பார் அருட்ஜோதி அடிகளார்.

ஆகவே, அத்தகைய பெரியவர்கள்தான், "சித்தர்கள்" என்னும் சிறப்புப் பெயர் பெற்றவர்கள்.

## பதினெட்டுச் சித்தர்கள்

செத்தவர்கள் இனத்தைச் சேராதவர்கள் சித்தர்கள்.

சாகாத மார்க்கமாகிய சன்மார்க்கத்தை விளக்க வந்த சித்தர்களே "சித்தர்கள்" எனப்படுவர்.

**சாகாத் தலை**

**வேகாக் கால்**

**போகாப் புனல்**

ஆகிய உண்மைத் தத்துவங்களை உணர்ந்தவர்கள் சித்தர்கள்.

சித்தர்களில் தலைசிறந்தவர்கள், எண்ணிக்கையில் பதினெட்டு பேர் என்பார்கள்.

அதில், ஞான சித்தர் நந்திதேவர், முதல்வர் அகத்தியர் அப்பால்

**திருமூலர்**

**புண்ணாக்கீசர்**

**புலத்தியர்**

**பூனைக் கண்ணர்**

**இடைக்காடர்**

**போகர்**

**புலிக்கையீசர்**

**கருவூரர்**

**கொங்கணவர்**

**காளாங்கியர்**

**அகப்பையர்**

**அழுகண்ணர்**

**பாம்பாட்டி**

**தேரையர்**

**குதம்பையர்**

**சட்டை நாதர்**

ஆகியவர்களே, பதினெண் சித்தர்கள் எனப்படுபவர்கள்.

இதோ! ஆதாரப் பாடல் இருக்கின்றது.

## எண்சீர் விருத்தம்

*நந்தி அகத் தியர் மூலர் புண்ணாக் கீசர்!*
*நற்றவத்துப் புலத்தியரும் பூனைக் கண்ணர்!*
*கந்திடைக் காடரும் போகர் புலிக்கை யீசர்!*
*கருவூரார் கொங்கணவர் மாகா ளாங்கி!*
*சிந்திஅழு கண்ணர் அகப் பையர்பாம் பாட்டி!*
*தேரையாரும் குதம்பையுடன் சட்டச் சித்தர்*
*செந்தமிழ்ச்சீர் சித்தர் பதின் எண்பர் பாதம்*
*சிந்தித்தே அணியாகச் சேர்த்து வாழ்வாம்.*

என்று வரிசைப்படுத்தி, சிந்தை களங்கமற்றுத் தெளிந்தவனே சித்தனாவான், என்கிறார்கள்.

## கலை, வல்லவர்கள்

இன்னும்,

**கமலமுனி**

**காகபுசுண்டர்**

**உரோமரிஷி**

**சுருளிச்சித்தர்**

**கம்பளிச்சித்தர்**

**காளிசித்தர்**

சசிவண்ணர்

யூசிமுனி

பிரம்மமுனி

வாசமுனி

அமலமுனி

கூர்மமுனி

சண்டிகேசர்

ஆனந்தர்

கைலாசநாதர்

கூன்கணவர்

போன்றவர்களும் உண்டு.

சித்தர்கள், எங்கும் உள்ளனர். எப்பொழுதும் இருப்பார்கள். சித்தர்கள் உலகம், சித்தர்கள் நாடு எனச் செப்புவார்கள். அத்தகைய உத்தமர்களின் உபயத்தினால், அபாயம் வாராது.

மணிமந்திர ஔடதங்களில் வல்லவர்கள். வான சாத்திரம் வரைந்து வைத்தார்கள். மூலிகையின் முறை கூறியவர்கள். எளிய தமிழில் எழுதி வைத்தவர்கள். இசையின் உண்மையினை எடுத்துக் காட்டியவர்கள்.

## முன்பின் வந்தவர்கள்

இதனின், முன்-பின் வந்தவர்களில் முக்கியத்துவம் பெற்றவர்கள்:

இராமதேவர்

இராமலிங்கர்

கோரக்கர்

சிவவாக்கியர்

தன்வந்திரி

திருமாளிகைத் தேவர்

மச்சமுனி

யாகோப்

சனகர்

சனாதனர்

சனந்தனர்

சனற்குமாரர்

வீரபிரம்மம்

சித்தையா

இன்னும்

சாக்கடைச் சுவாமிகள்

சட்டிச்சுவாமிகள்

கட்டக்களி சுவாமிகள்

குழுமிச் சுவாமிகள்

சூட்டுக்கோல் சுவாமிகள்

சின்னான் சுவாமிகள்

மாயாண்டி சுவாமிகள்

மௌன சுவாமிகள்

மாக்கான் சுவாமிகள்

அழுகுச் சுவாமிகள்

பொதிச் சுவாமிகள்

சங்கிலிச் சுவாமிகள்

சடைச் சுவாமிகள்

நடைச் சுவாமிகள்

பிரம்மமுடி சுவாமிகள்

தடி சுவாமிகள்

சுரைக்காய் சுவாமிகள்

நிர்வாண சுவாமிகள்

கசவனம்பட்டி சுவாமிகள்

பூண்டி சுவாமிகள்

தபோவனம் சுவாமிகள்

குள்ளச் சுவாமிகள்

இரட்டியப்பட்டி சுவாமிகள்

ரகோத்தமர்

இராகவேந்திரர்

தோபா சுவாமிகள்

பாபா சுவாமிகள்

மோத்தி சுவாமிகள்

நாகூர் ஆண்டவர்

குணங்குடி மஸ்தான்

பட்டினத்தார்

பத்ரகிரியார்

தாயுமானவர்

கண்ணுக்குட்டி சுவாமிகள்

திருவல்லம் சுவாமிகள்

பாடகச்சேரி சுவாமிகள்

சதாசிவா பிரம்மேந்திரர்

சேந்தமங்கலம் சுவாமிகள்

சேஷாத்திரி சுவாமிகள்

கல்பட்டய்யா

பாம்பனடிகள்

கோடநல்லூர் சுவாமிகள்

கரபாத்திர சுவாமிகள்

அருணகிரிநாத சுவாமிகள்

திருப்புகழ் தண்டபாணி சுவாமிகள்

ஆதிசங்கரர்

பரமஹம்சர்

பாலசித்தர்

சிற்றம்பலநாடிகள்

குருஞான சம்பந்தர்

குகை நமசிவாயர்

குரு நமசிவாயர்

குமாரதேவர்

சாந்தலிங்க சுவாமிகள்

சிதம்பர சுவாமிகள்

சிவஞான சுவாமிகள்

சொருபானந்த சுவாமிகள்

சிவப்பிரகாசர்

சுடுகாட்டுச் சுவாமிகள்

இப்படிப் பத்தரை மாற்றுத் தங்கங்களாகச் சித்தர் பெருமக்கள் சிறந்து விளங்கிய தேசம், நமது பாரத பூமி.

## வாலையை வசப்படுத்தினவர்கள்

கரும சித்தி, யோக சித்தி, ஞான சித்தி ஆகிய முச்சித்திகளையும் பெற்று, குண்டலினி சக்தியை எழுப்பி, வாலை மனோன்மணியை வசப்படுத்திக் கொண்டவர்கள் சித்தர்கள்.

"கோயில்" என்று குறிப்பிடுகின்ற அத்தனைத் தலங்களிலும் சித்தர்கள் வாசம் செய்கின்றார்கள்.

அனந்தசயனத்தில் அகத்தியர்!

பழநியிம்பதியில் போகர்!

பரங்குன்றில் மச்சமுனி

அருணையில் அடைக்காடர்!

திருப்பதியில் கொங்கணவர்!

சிதம்பரத்தில் திருமூலர்!

எட்டுக்குடியில், வால்மீகி!

கஞ்சமலையில், காளாங்கிநாதர்!

குடந்தையில், கும்பமுனி!

பாபநாசத்தில், புலத்தியர்!

பொய்கைநல்லூரில், கோரக்கர்!

காளத்தியில், கருவூரார்!

அழகர் மலையில், இராமதேவர்!

திருநாகையில், அழுகண்ணர்!

இடைமருதூரில், நாரதர்!

கருவைநல்லூரில், மார்க்கண்டேயர்!

துவாரகை மருதமலையில், பாம்பாட்டி!

நண்ணாவூரில்,புண்ணாக்கீசர்!

ருதரகிரியில், காகிபர்!

தென்மலையில், வரதர்!

பெருங்காவூரில், கன்னிச்சித்தர்!

வைத்தீஸ்வரன்கோயிலில், தன்வந்திரி!

காஞ்சியில், கடுவெளிச்சித்தர்!

மதுரையில், சுந்தரானந்தர், குழந்தையானந்தர்!

சென்னையில், குணங்குடி மஸ்தான்!

வேலூரில், தோபாசுவாமிகள்!

திருவொற்றியூரில், பட்டினத்தார்!

திருவான்மியூரில், பாம்பனடிகள்!

இவ்வாறு, ஆங்காங்கே அமர்ந்து அநேக அற்புதங்களைச் செய்து வருகின்றார்கள்.

வடலூர் பெருவெளியில், வள்ளலார் மறைந்துறைகின்றார் என்பதனையும் மறந்துவிடக் கூடாது.

ஆம், ஆமாத்தூரில் வண்ணச்சரப முருகதாச மூர்த்திகள் முத்திபெற்று, சித்தர் கூட்டத்தைச் சேர்ந்துள்ளார் என்பது திண்ணம். எனவே, எல்லா மதத்திலும் சித்தர்கள் உண்டு. கல்லறையிலும் காட்சியளிக்கின்றனர். மசூதியிலும் மகான்கள் இடம் பெற்றுள்ளனர் என்பதனையுட் மறுக்கமுடியாது.

சித்தர் பெருமக்கள், அன்றும் இன்றும் ஏன்? என்றும் இணக்கத்தோடு, வணக்கத்திற்குரியவர்களாய் வாழ்ந்து கொண்டு வருகின்றார்கள்.

## ஜீவசமாதியடைந்தவர்கள்

சித்தர்களில், ஜீவசமாதியடைந்தவர்களும் உண்டு. திருவெண்காடர், இராகவேந்திரர், பிரம்மேந்திரர், திருப்போரூர் சிதம்பரர், திருவாரூர் தட்சிணாமூர்த்திகள், சித்தர் காடு சிற்றம்பல நாடிகள், காசியில் திரிலிங்கர், போத்தலூரில் வீரபிரம்மம், சித்தையா, மயிலத்தில் பாலசித்தர் இன்னும் பலர் இருக்கத்தான் செய்கின்றார்கள்.

## காலங்கடந்தவர்கள்

"சித்தமார்க்கம்" என்பது, காலங்கடந்து நிற்பதொன்றாகும். அட்டமா சித்திகளும் கைவரப் பெற்றவர்களை யாராலும் அசைக்க முடியாது. அவர்கள், கற்பகோடிகாலம்,

அற்புதமான மெல்லிய உடலோடு எங்கும் விளையாடிக் கொண்டிருப்பார்கள்.

வேண்டுவார்க்கு, வேண்டுவதை ஈந்து, தோன்றாத் துணையாக நின்று நிலவி வருகிறார்கள் என்பது சரதம்.

## கணத்தவர்கள்

கபிலர், தொல்காப்பியர், வள்ளுவர், ஔவையார், காரைக்கால் அம்மையார் ஆகியவர்களும் , சித்தர் கணத்தைச் சேர்ந்தவர்களேயாவார்கள்.

நரை, திரை, மூப்பு, சாக்காடு அனைத்தும் அற்றவர்கள்.

''எண்ணிய நான் எண்ணியவாறு எனக்கருளும் தெய்வம்'' என்றபடி, அவர்களெல்லாம் நினைத்ததை நிறைவேற்றுபவர்கள்.

*"நிலமிசை நீடு வாழ்வார்!"* என்னும் திருக்குறள் இலக்கியத்திற்கு இலக்கணமானவர்கள்.

"தந்தையைக் கண்டேன் சாகா வரம்பெற்றேன், சிந்தை குளிர்ந்தேன் என்று உந்தீபற! சித்தெல்லாம் வல்லேன் என்று உந்தீபற!"

என்பது, தெளிந்த சித்தர்களின் தெய்வ வாக்கு! அவர்களால் ஆகாதது ஒன்றுமில்லை, எல்லாக் கலைகளையும் இனிதே கற்றவர்கள்.

## செயற்கரிய செயல்

*''கந்துக மத கரியை வசமாய் நடத் தலாம்!*
*கரடி வெம்புலி வாயையும் கட்டலாம்!*
*ஒரு சிங்க முதுகின்மேல் கொள்ளலாம்!*
*கட்செவி எடுத்து ஆட்டலாம்!*
*வெந்தழலில் இரதம் வைத்து ஐந்து லோகத்தையும்*
*வேதித்து விற்றுண்ணலாம்!*
*வேறு ஒருவர் காணாமல் உலகத்து உலாவலாம்!*

*விண்ணவரை ஏவல் கொளலாம்!*

*சந்தமும் இளமையோடு இருக்கலாம்!*

*மற்றொரு சரீரத்தினும் புகுதலாம்!*

*சலம் மேல் நடக்கலாம்!*

*கனல் மேல் இருக்கலாம்!*

*தன் நிகரில் சித்தி பெறலாம்....!"*

என்று, திடமாகச் சொல்லுகின்றார் தாயுமானவப் பெருந்தகையார்!

## உடம்பின் பயன்

எனவே, இத்தனைக்கும் இந்த உடம்பு இருந்துதானேயாக வேண்டும்.

*"அன்னத்தால் ஆய உடம்பின் பயனெல்லாம்*

*முன்னோனைக் காட்டிவிடும்!"*

என்று, சுருக்கமாகச் சொன்னார் அறிவிற் சிறந்த ஔவை பிராட்டியார்.

## ஞான வேழம்

இறைவன், கோதகன்ற யோகர் மனக்குகையில் வாழ்கின்றான்!

வஞ்ச வாதகன்ற ஞானியார் தம் மதியில் ஊறும் வானமுதலாய் இருக்கின்றான்.

மாயவேதகன்ற முத்தர்களை விழுங்கும் ஞான வேழமாய் விளங்குகின்றான்!

நெஞ்சில், தீதகன்ற மெய்யடியார் தமக்கு வாய்த்த செல்வமாய்த் திகழ்கின்றான்!

எனவே, கண்டேன் களித்தேன், கருணைத் திரு அமுதம் உண்டேன்! உவந்தேன் உயர்நிலைமேல் ஓங்குகின்றேன்!" என்று, பெரியவர்களெல்லாம் பேசிப் பெருமையடைகின்றார்கள்.

## அமுதபானம்

சித்துடைச் செல்வர்கள் அத்தனை பேரும், "ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீர்! என்னும் "அமுத பானம் அருந்தியவர்கள். அண்டத்தை விட்டு, அகண்டகத்தில் கலந்து, எங்கும் நிறைந்து நிற்கின்றனர்.

*"பொன்னான மேனி பெற்றேன்!"* என்பது, வள்ளலாரின் வாக்கு! அவருடைய திண்ணமான எண்ணம் இங்கு தெரிகின்றது..

*"புண்படா உடம்பும் புரைபடா மனமும்*
*பொய்படா ஒழுக்கமும் பொருந்திக்*
*கண்படா திரவும் பகலும் நின் றனையே*
*கருத்தில் வைத்து ஏத்துழவதற்கு இசைந்தேன்*
*உண்பனே எனினும் உடுப்பனே எனினும்*
*உலகரை நம்பிலேன்! எனது*
*நண்பனே! நலஞ்சார் பண்பனே! உனையே*
*நம்பினேன் கைவிடேல்! எனையே!"*

என்பார்

## நாதாக்கள்

இதில், எல்லாம் வல்ல இறைவனை, நாத வடிவில் கண்டு போதப் பெருவெளியில் புகுந்த நாதாக்களும் உண்டு. அவர்களை, வரிசைப்படுத்திச் சொல்ல வேண்டியது அவசியந்தான்

**சத்து நாதர்!**

**சாலோக நாதர்!**

**மதங்க நாதர்!**

**கடயேந்திர நாதர்!**

**சுருளி நாதர்!**

**கோரக்க நாதர்!**

மச்சேந்திர நாதர்!

ஆதி நாதர்!

குக்குட நாதர்!

அருணகிரி நாதர்!

பீம நாதர்!

சத்திய நாதர்!

அநாதி நாதர்!

சதோக நாதர்!

வகுளி நாதர்!

கந்தனேந்திரர்!

நாகார்ச்சுரர்!

புஜங்கர்!

சண்டிசேகர்!

சுந்தர நாதர்!

இவர்கள் அனைவரும். இறைவனை இசை வடிவில் கண்டு, ஓங்காரத் துவனியின் உண்மையினை உணர்ந்தவர்கள்.

## நந்தியம் பெருமான்

இதில், விந்தை மிகுந்தவர், ''நந்தி தேவர்'', இவர், "சிலாதரனின் திருமகன். ஒரு கோடி வருடம் உக்கிர தவங்கிடந்து. பரமேஷ்வரனுக்குத் தரமான வாகனமானவர். கயிலையின் வாயிற் காப்பாளர். அகச் சந்தான குரவர்களுக்கு ஆதி குருவானவர் - முக்கண்ணனுக்கு முதன் மாணவர்.

இடது கையில் சூலமும், வலது கையில் ஜெப மாலையும் கொண்டவர் திருமூலரின் குருமூர்த்தம்.

"நயனங்கள் மூன்றுடை நந்தி" என்றுரைக்கும் திருமந்திரம் அற்புதமான பொற்பிரம்பேந்தி நிற்பவர். மனைவியின் பெயர் "சுயசை", எனப்பெறும்.

## பிரதோஷ மகத்துவம்

இவரது, இரு கொம்புகளுக்கிடையே இறைவன்.

*"சந்தியா நர்த்தனம்"* என்னும் *"மாலைமாநடம்"* ஆடிய மையினால், *"பிரதோஷ விரதம்"* பெரும் மகத்துவம் பெற்றது.

திரயோதசி திதி. அத்துணைச் சிறப்பு வாய்ந்தது நந்தியம் பெருமானுக்குரிய நாள் அது. எனவே அப்பிரதோஷ காலத்தில் சித்தர்களெல்லாம் வந்து, சிவபெருமானையும், நந்தியம் பெருமானையும் தரிசித்துப் பேறுபெறத் தவறவே மாட்டார்கள்.

## தலைமைத் தமிழ்ச் சங்கம்

சித்தர்கள் அத்தனை பேர்களும், அழியா உடம்பினை அடைந்து, வழி வழியாக வாழ்ந்துகொண்டு வருகின்றார்கள் என்பதற்குச் சிறந்தொரு சான்று, சென்ற நூற்றாண்டில் நிகழ்ந்தது.

சித்தர்கள் தத்துவத்தில், ஒரு சிறப்பு, சென்ற, பன்னீராயிரம் ஆண்டுகளுக்கு முன்னே, பாண்டியர்களால் நிறுவப்பெற்ற தலைமைத் தமிழ்ச் சங்கத்தில், அகத்தியர்,தலைமை தாங்கி, 549 அரும்பெரும் புலவர்களைக் கொண்டு, அமுதத் தமிழை வளர்த்தார்.

## மூன்று சங்கத்திலும் குறுமுனி

தென் மதுரையில், அச்சங்கம் பல நூறு ஆண்டுகள் நடந்தது. பின் கடல் கொள்ளப் பெற்றது.

அதன் பின், இரண்டாம் சங்கம், "இடைச் சங்கம் கபாட புரத்தில் நிறுவப் பெற்றது, பல ஆண்டுகள் முறையே நடந்தது. அதிலும் அகத்தியர், தலைமையேற்று, 59 அரும் புலவர்களைக் கொண்டு தமிழ் ஆராயப்பெற்றது. இறுதியில், மூன்றாவது கடைச் சங்கம், "முடத்திரு மாறன்!" என்னும் பாண்டிய மன்னனால் நிறுவப்பெற்று, அவ்வாறு பல நூற்றாண்டுகள் நடைபெற்றது. அப்பொழுது 49 புலவர்களுக்கு நல்ல தலைவராய் அகத்தியர் அமர்ந்திருந்தார்.

## மலையமாதவன்

பின்னர், அதுவும் கடல் கொள்ளப் பெற்றது கண்டு, மகேந்திர மலை, தண்டகவனம், விந்தகம், தமனியம், ஏமகூடம், காசி, நைமிசம், கயா, இமயம் ஆகிய 12 இடங்களில் அகத்தியர் அமர்ந்திருந்து, அப்பால், பொதிய மலை வந்து சேர்ந்து, "மலைய மாதவன்" என்னும் பெயர் பெற்றார் என்று வரலாறு கூறுகின்ற வகையில் அகத்தியர் வாழ்ந்து வந்தார் என்பது தெற்றெனப் புலப்படுகின்றதல்லவா?

## இனிய லட்டு

அத்தகைய அகத்தியனார், சென்ற, 125 ஆண்டுகளுக்கு முன்னே, "வடலூரடிகள்" என்னும் வள்ளலார் வாழ்ந்திருந்த காலத்தில், கடலூர் பழைய பட்டினத்தில், ஓர் இரவில், பெருமானைச் சந்தித்து, கையுறையாக, ஒரு பெரிய, இனிய உண்ணும் பொருளாகிய இலட்டினைக் கொடுத்துச் சென்றார் என்று சொல்லக் கேட்கின்றோம். இதனை, உண்மையான வரலாறு, மிக வெண்மையாக விளக்குகின்றது.

எனவே, பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே குறிப்பிடப்பெறும் அகத்தியனார். சமீபத்தில் பழைய பட்டினத்திலும் நுழையப் பெற்றார் 'என்று சொல்லுகின்ற பொழுது, சித்தர்களின் தத்துவத்தை எப்படித்தான் சித்தரிப்பது!

*இருந்தேன் இக் காயத்தில்*
*எண்ணிலா கோடி*
*இருந்தேன் இராப் பகல்*
*அற்ற இடத்தே,*
*இருந்தேன் இமயவர்*
*ஏத்தும் பதத்தே*
*இருந்தேன் என் நந்தி*
*இணையடி கீழே!"*

ஏன்கின்றார். சித்தர் கூட்டத்தைச் சேர்ந்த தேவர் திருமூலர்.

## கற்பகம் கண்டவர்கள்

சித்தர்கள் அத்தனை பேரும் "கற்பமுறை" கைவரப் பெற்றவர்கள். ஆகவே அவர்களுக்கு அழிவில்லை.

காயத்தில் 'காயம் படாது' காயத்தை வச்சிரகாயமாய் ஆக்கிக் கொண்டார்கள்.

*இதோ! ஆதாரம் இருக்கிறது.*

*"கற்பத்தைக் கண்டால், காயம் அழியாது*
*கற்பத்தினாலே, காணலாம் கைலையை,*
*கற்பத்தினாலே, காணலாம் ஜோதியை*
*கற்பத்தினாலே, காலையும் கட்டிடே!"*

இங்கு *"காலைக் கட்டு"* என்பது, காற்றைப் பிடித்துக் கட்டும் வாசி யோக வகையாகும்.

*"புறப்பட்டுக் புக்குத் திரிகின்ற வாயுவை*
*நெறிப்பட உள்ளே நின்மலம் ஆக்கில்,*
*உறுப்புச் சிவக்கும், உரோமம் கறுக்கும்*
*புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே!"*

என்கின்றார்

இங்கு, *"புரிசடையோன்"* என்பது சிவனாகிய "சீவன்" என்னும் உயிர். சிவன் என்னும் குறுக்கல். "சீவன்" என்று நெடுக்கல் விகாரமாயிற்று.

சிவம் போன உடலுக்கு "சவம்" என்று பெயர் . சவம் என்ற சொல்லுக்கு தலைகாட்டாதிருக்கத் "தவம்" செய்தல் வேண்டும்.

ஆனால், தானமும் தவமும் - தான் செயல் அரிது. தானமும், தவமும் தான் செய்வாராயின், வானவர் நாடு வாழி திறந்திடுமே!

ஔவைப் பிராட்டியாரின் அனுபவ வாக்கு.

*"காற்றைப் பிடிக்கும் கணக்கறிவாளர்க்குக்*
*கூற்றம் உதைக்கும் குறியது வாமே!"*

என்பது பொய்யல்ல.

*"பிராணன் மனத்தொடும் பேராது அடக்கிப்*
*பிராணன் இருக்கில் பிறப்பிறப்பில்லை!"*

என்பது, ஒப்பத் தகுந்த ஓர் உண்மை.

*"தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்*
*முன்னை வினையெனும் முடிச்சை அவிழ்ப்பார்கள்*
*பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்*
*சென்னியில் வைத்த சிவனருளாலே!"*

என்பது, மந்திர மொழியே தவிர, வெறும் தந்திர மொழியல்ல.

*"ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்*
*நடுங்குவ தில்லை நமனும் அங்கில்லை!"*

*"உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே*
*உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த் தேனே!"*

என்றெல்லாம் சொல்லுகின்ற நிலையில், ஆயிரம், பல்லாயிரம் ஆண்டுகளைக் கண்டவர்.

## உள்ளம் பெருங் கோயில்

இறப்பு - பிறப்பு அற்றவர், என்றும் ஒன்றுபோல் இருப்பவர். தந்தேகத்தைப் பற்றி, அவர்களுக்குச் சந்தேகமே இல்லை. காரணம், குறிக்கும் இவ்வுடலை "கோயில் எனக் கொண்டவர்கள்,

*"தேகம் என்னும் சிவாலயமாம்! -அதில்*
*சென்னி செறுவாயில் கோபுரமாம்!"*

என்று கூறும் ஞானக்கும்மி.

இதனை மிக அழகாக , வள்ளலார் வாக்கில் காணலாம்.

“கோயிலைக் கண்டங்கே
கோபுர வாயிலில்
கூசாது சென்றேனடி! அம்மா!
கூசாது சென்றேனடி!
கோபுர வாயினுள்
சித்திகள் சித்தர்கள்
கோடி பல் கோடியடி! -அம்மா!
கோடி பல் கோடியடி!”

என்கின்றார்

“உள்ளம் பெருங்கோயில்
ஊன் உடம்பு ஆலயம்!”

என்பதும் உண்மைதானே!

தன்னையறிந்தவர்கள்

“உச்சிக்குக் கீழடியோ
ஊசிமுனை வாசலுக்குள்
மச்சுக்குள் மேலேறி
வான் உதிரம் தான் எடுத்துக் கச்சை வடம் புரியக்
காயவூரர்ப் பாதையிலே
வச்சி மறந்தல்லோ
வகை மோசம் போனேனடி,”

என்று, அழுது புலம்புகின்றார். அழுகுணிச் சித்தர்.

“உடலுக்குள் நீ நின்று
உலாவுவதைக் காணாமல்

*கடல்மலை தோறும் திரிந்து*

*கால் அலுத்தேன் பூரணமே!"*

என்கின்றார், முற்றத் துறந்த பட்டினத்துப் பிள்ளை.

*"தத்துவத்தைப் பார்த்து மிகத்*

*தன்னை அறிந்தறிவார்*

*உய்த்துணைத்தான் பாராமல்*

*உய்வாரோ? பூரணமே!"*

என்று சொல்லும் வார்த்தை இனிதல்லவா?

*"தன்னை அறியார்,*

*தலைவன் தனையறியார்!"*

என்பது, *"சிவபோகச் சாரம்"*

*"தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே! - ஒரு*

*தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே!'*

என்று, பாடப்படுவது திருவருட்பா.

இந்நிலைகளெல்லாம், சித்தர் மார்க்கத்தைச் சேர்ந்தவைகள் ஆகும்.

*"ஆடையிலே விண்ணுக்குள் சித்தர் கோடி*

*அந்தந்த மலைகளினால் தாக்கக் கோடி!"*

என்று, சட்டென்று சொல்ல வந்தவர் சட்ட முனிவர்.

**கோடி கோடி**

*"ஓடி ஓடி ஓடி ஓடி உட்கலந்த ஜோதியை*

*நாடி நாடி நாடி நாடி நாட்களும் கழிந்து போய்*

*வாடி வாடி வாடி வாடி மாண்டுபோன மாந்தர்கள்*

*கோடி கோடி கோடி கோடி எண்ணிறந்த கோடியே*

என்று, வருந்துகின்றார், சிவவாக்கியர்.

இப்படியும் , சித்தர் ஆகாமல், செத்தவர்கள் கோடி பேர் எனப் பெறப்படுகிறது.

## சாகா வரம்

*"நடமாட்டேன் என் உளத்தே*

*நான் சாக மாட்டேன்!*

*நல்ல திரு அருளாலே*

*நான் தான் ஆனேனே!"*

என்பது, சன்மார்க்க செல்வரின் சத்திய வாக்கல்லவா?

*நோவாவது நோன்பெனைப்போல் நோற்றவரும், எஞ் ஞான்றும்*

*சாவா வரம் என்னைப்போல் சார்ந்தவரும் -தேவா! நின்*

*பேரருளை என்போலப் பெற்றவரும்; எவ்வுலகில்*

*யார் உளர்? நீ! சற்றே அறை!*

என்று கேட்கின்றது. "பொதுநெறிப் புதையல்" என்னும் ஞான பொக்கிஷம்.

## எட்டாப் புரவி

*"காலனை வென்ற கருத்தறி வாளர்க்குக்*

*கோலங்கள் ஏதுக்கடி? குதம்பாய்!*

*கோலங்கள் ஏதுக்கடி?"*

*என்பதும், சித்தர் ஒருவரின் திருவாக்குதானே!*

*"எட்டாப் புரவியடி! ஈராறு காலடியோ*

*விட்டாலும் பாரமடி! வீதியிலேதான் மறித்துக்*

*கட்டக் கயிறெடுத்துக் கால்நாலும் சேர்த்திருக்கி*

*அட்டாள தேச மெல்லாம் - என் கண்ணம்மா,*

*ஆண்டிருந்தால் ஆகாதோ?'*

என்பார், பிறிதொரு பெருஞ்சித்தர்.

## நிறைமொழி மாந்தர்

காமாந்த காரமெனும் கள்ளுண்டு கண்மூடி ஏமாந்து போய்.

இறப்புப் பிறப்பிற்குள்ளானவர்களைப் பற்றி கேட்கின்றார் கொங்கணவர்.

போதிய அநுபவம் இல்லாமல், வாசியை அடக்கி, சித்தி பெறத் துடிப்பவர்களைப் பற்றிக் கூறுகின்றார்.!

*"கையில்லா குட்டையன் கட்டிக்கிட்டான்-இரு*

*காலில்லா நெட்டையன் முட்டிக்கிட்டான்*

*ஈ இல்லா தேனெடுத் துண்டுவிட்டான் - அது*

*இனிக்கு தில்லையே வாலைப் பெண்ணே!"*

என்பார்

எனவே, இப்படியெல்லாம் சித்தர்கள் செய்துள்ள முன் எச்சரிக்கைகளை நாம் முழுவதும் உணரவேண்டும். இதுதான், அகத்தியர் கண்ட அரும்பெரும் தத்துவமாகும்.

அகத்தியருக்கு, ''தட்சிணாமூர்த்தி'' என்று ஒரு பெயருண்டு.

பார்வதி - பரமேஷ்வரன் திருமணத்தில், தென்மலை சென்று சீர்படுத்தியவர்.

தவமுனி - புலத்தியரின் சகோதரி, ''உலோப முத்திராதேவியை" மணந்து கொண்டவர்.

பிரம்மயாக கும்பத்தில் தோன்றியவர். "குடமுனி எனப் பெயர் பெற்றவர். அகத்தியர் முதல், அத்தனை சித்தர்களும், "நிறை மொழி மாந்தர்" எனப்படுவர்.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி தானே மந்திரம் என்ப!"

என்று சொல்லும் 'தொல்காப்பியம்'

*"நிறைமொழிமாந்தர் பெருமை நிலத்து*

*மறை மொழி காட்டி விடும்!"*

என்பார், மா தாநுபங்கி

## சிவநிலை

சித்தர்கள் பெருமை செப்புந்தரமன்று மலையும்- குகையும் வனமும் சித்தர்களின் வாசம்.

ஜோதி விருட்சம் தேவதாரு ஆகியவைகள் இருக்கும் இடங்கள் ஆராய்ந்து அறிந்தவர்கள் சித்தர்கள் பெருமக்கள்.

அழுகண்ணி - தொழுகண்ணி என்பதெல்லாம் அவர்களுக்குத்தான் தெரியும்.

அருநெல்லியைக் கண்டுபிடித்தவர்கள் உயிர்தரும் சஞ்சீவியை உணர்ந்தவர்கள் சிறியா நங்கை-பெரியா நங்கையைத் தெரிந்தவர்கள்.

ககன குளிகையைக் கண்டுபிடித்தவர்கள். கொல்பாவை-கொல்லாப்பாவை அவர்களின் குறிப்பால் உள்ளவைகள் பலாப்பழத்தின் உள்ளே, எத்தனை சுளைகள் இருக்கின்றன என்பதனைச் சூட்சமமாகச் சொல்லவல்லவர்கள் சித்தர்கள்.

*"தத்துவம் அனைத்தும் தனித்தனி கடந்தோய்!*

*தத்துவாதீத மேல் நிலையில்*

*சித்திகள் முழுவதும் தெரிந்தனம்! அவைமேல்*

*சிவநிலை தெரிந்திடச் சென்றோம்!"*

என்று, தனது முடிந்த அனுபவ நிலையினை எடுத்து முன் வைக்கின்றார் - இராமலிங்கப் பெருமானார்.

## ரசத்தைக் கட்ட வல்லவர்கள்

உருண்டோடும் பாதரசத்தை, உள்ளங்கையில் வைத்து ஒரு நொடியில் கட்ட வல்லவர்களை உத்தம சித்தர்கள் என்பார்கள்.

நாதமாகிய ரசம், நழுவி வீழக்கூடாதல்லவா? அது மாத்திரமல்ல, சித்தர்கள் ரசத்தில் உயர்ந்த ரசமாகிய, சமரசத்தைக் கண்டவர்கள்.

அச்சத்தை அறவே ஒழித்தவர்கள். எவனுக்குமல்ல எமனுக்கும் அஞ்சாதவர்கள்

தொட்டால் கொட்டும் சுபாவமுடைய தேனீக்களும், அவர்கள் கிட்ட நெருங்காது. விடம் அவர்கள் இடம் செல்லாது.

ஒரு சமயம், வள்ளலாரைத் தீண்டிய அரவம், தனக்கேறிய விடத்தால் தானே மடிந்தது என்பது சரித்திரம். எனவே, ஞானசித்தர் நம்முடைய பெருமான் என்பது நன்றாக விளங்குகின்றது அல்லவா?

## தனி ரேகைகள்

சித்தர்கள் அத்தனை பேரும், பிறவியிலேயே பெரியவர்கள். அவர்கள் தோன்றும் பொழுது இவர்கள் சித்தர்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் என்று அவர்களின் இரு கரங்களிலும், ஏன்? கால்களிலும் கூடத் தத்துவ ஞானத் தனி ரேகைகள், இறைவன் அருளால் எழுதப்பெற்று வந்துள்ளார்கள்.

## தீர்மானித்தல்

ஒரு சிலரின் கைகளில், குமரனின் கூர்வேலும், கோழிக்கொடியும், சங்கும், சக்கரமும் இயல்பாய் அமையப் பெற்றுள்ளன.

இத்தனைய அடையாளங்களைக் கொண்டு, இவர்கள் பக்தர்கள்-யோகிகள்-ஞானிகள்-சித்தர்கள்- முத்தர்கள் என தீர்மானித்துவிடலாம்.

## திருவருட் சித்தர்

சுருக்கமாகச் சொல்லப் போனால், ஒரு சேர 6666 பாடல்களை அநாயசமாகப் பாடி, ஆறுமுகப் பெருமானின் திருவருளை முற்றும் பெற்றவரான, ஸ்ரீமத் பாம்பன் அடிகளுடைய திருக்கரத்தில், "கபாலி முக்கோணக் கைலாச ரேகை" என்பது, இயல்பாக அமையப் பெற்றிருந்தது.

கமலமா முனிவரின் ஏட்டுச் சுவடியிலும் அவைகளைப் பற்றிக் குறிப்பிடப் பெற்றிருந்தன. எனவே, அடிகளாரைத் "திருவருட் சித்தர்" எனத் தெளிந்தனர்.

## கலைமகளின் தலைமகன்

இதனை, அகத்தியர் மிக அழகாக ஒப்பு கொள்ளுகின்றார்.

ஆம்: இகத்தில் உள்ளாரும். பரத்தில் உள்ளாரும் அகத்துள் வைத்துப் போற்றும் மகத்துவம் மிகுத்த மாதவ சித்தசிரோமணி அகத்தியரல்லவா?

''கலைமகளின் தலைமகன்'' என்று சிறப்பித்துச் சொல்லுவார்கள். இருடியர்களில் ஏற்றம் பெற்றவர்.

ஆழ்கடலை ஒருகையால் அள்ளிக் கொண்டு உமிழ்ந்தவர்.

## அற்புத நட்சத்திரம்

சிவபெருமானிடத்திலும், முருகப் பெருமானிடத்திலும், அமிழ்தனைய தமிழ் கற்றுத் தேர்ந்தவர் அகத்தியர் என்பதனை உலகம் நன்கறியும்.

பிரம்மதேவனும் அறியாத பிரணவப்பொருளினைச் செவ்வேளிடம் செவ்வையாய்க் கேட்டுணர்ந்தவர்.

அகந்தை கொண்ட விந்த மலையை அடக்கியவர்.

காவிரியாறு, பூமி நாடி வருவதற்குக் காரணமாய் இருந்தவர் அகத்தியர்.

இராவணனை, இசையினால் வசீகரித்தவர்.

பக்குவம் நிறைந்த மாணாக்கர்கள் பன்னிரண்டு பேர்களுக்கு. அகத்தியர் நூல் போதித்தவர். இராமபிரானுக்குப் பெருவிருந்து வைத்து, "பிரம்ம சாஸ்திரம்" கொடுத்தவர்.

நக்கீரரின் மயக்கம் தவிர்த்து நன்மை புரிந்தவர்.

ஆகாயத்தில், இன்றைக்கும் அகத்தியர் பெயரால் ஒரு நட்சத்திரம் இருக்கிறதாகச் சொல்லுவார்கள். அவை வளிப்படுமேல், ஆழ்கடலில் எழும் அலைகள் அடங்கி, ஒடுங்கிவிடும் என்பர்.

கடல் குடித்த காட்சிக்கு இது ஒரு சரியான சாட்சியாகும்.

## நாட்டியக்கலை

அகத்தியர் செய்த முதல் நூல் "அகத்தியம்" எனப்படுகிறது. அவை இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழுக்கும் இலக்கணம் கூறும் எழில் நூலாகும். ஒரு சேரப் பன்னீராயிரம் சூத்திரங்களைக் கொண்டு உயர்ந்த நூல். ஆனால், அந்நூல், இந்நாளில் இல்லை.

*இலக்கியம் இன்றி இலக்கணம் இன்றே*

*எண்ணின் றாகில், எண்ணெயும் இன்றே*

*எள்ளினின் றெண்ணெய் எடுப்பது போல*

*இலக்கியத் தினின்றே எடுபடும் இலக்கணம்*

*இதனை, "அகத்திய சூத்திரம்" எனச் சொல்லுவார்.*

மற்றும், *"இராஜசேகர பாண்டியன்"* என்னும் கலை வல்ல

மன்னன், அகத்திய முனிவரிடம், நாட்டியக் கலையின் நுட்பம் உணர்ந்து, "பரத வித்வான்" ஆனான் என்பது பிரசித்தம்.

## தேவர் திருமூலர்

*"கயிலாய பரம்பரையில் வந்த சிவயோக மாமுனி" என்பர்.*

*"சுந்தரநாதன்" என்றும் சொல்லுவார்*

*"திருமந்திரம்" என்ற சிறந்த நூல் செய்தவர்.*

*மந்திரம் கொண்டு வழிபடு வோர்க்கு*

*சுந்தர நாதன் சொல்லிய மந்திரம்*

என்ற வாக்கு விளக்கம் தருகிறது

'தந்திரம் என்பது, சார்பு மூவாயிரம்' என்ற வார்த்தையினை வைத்து,திருமூலர் பாடிய திருமந்திரம். மூவாயிரம் பாடல்களைக் கொண்டது என ஒரு சிலர் முடிவு கட்டிவிட்டனர். ஆனால், எண்ணி, எண்ணாயிரம் பாடல்கள் யான் பாடினேன் என்று கூறுவதையும் கொஞ்சம் கவனிக்க வேண்டும்.

*தேடித் திரிந்து திகையாதீர்! மாந்தரே!*

*பாடினேன் எண்ணா யிரத்தினில் பார்த்திடே*

என்பது, மூலரின் மொழியேதான்.

மற்றும், அருட்சோதி அடிகளாகிய வள்ளலார். நன்கு ஆராய்ந்து பார்த்த நிலையில், மாமூலரின் மந்திரம், எண்ணாயிரம் பாடல்களுடையது என்று, தீர்க்கமாகச் சொல்லுகின்றார்.

## வாழையடி வாழை

தேவார கர்த்தாக்கள், மூவருக்கும் முந்தியவர், தேவர் திருமூலர் என்பது தெளிவு - பரம்பரை விளக்கத்தைப் பார்க்கின்ற பொழுது, பரமேஸ்வரன் பராசக்திக்கு உபதேசிக்கவும் சக்தி, நந்தியம் பெருமானுக்கும், நந்தி, சனற் குமாரர்களுக்கும் அவர்கள் பரஞ்சோதி முனிவருக்கும், முனிவர் மெய்கண்ட தேவருக்கும் உபதேசித்த வழியில், வாழையடி வாழையாக வந்தவர் திருமூலர் என்பது சாத்திர சம்மதம்.

## உடம்பினுட் புகுதல்

நந்தி அருள்பெற்ற ".சுந்தரநாதன்" என்னும் சிவயோகி அகத்தியரைக் காணும் பொருட்டு, பொதிய மலை நாடி வந்த பொழுது. இடையில் திருவடுதுறையில், காவிரிக்கரையில் ஆவினங்கள், கண்ணீர் வடித்து நிற்பதைக் கண்டு, உற்று நோக்க, மாட்டு மேய்க்கும் "மூலன்" என்பவன் மாண்டு கிடக்கிறான்.

மனம் இரங்கினார். திருவருள் தூண்ட, செத்துக் கிடக்கும் மூலனின் உடம்பினுட்புகுந்து, "திருமூலராய்" எழுந்து பரிதவித்து நிற்கின்ற பசுக்களின் துன்பத்தை நீக்கி இன்பம் அருளினார்.

## திருமந்திரம்

பழைய மூலனின் மனைவி வந்து, பரிவோடு பார்த்தபொழுது, "இனி உனக்கு என்னோடு தொடர்பில்லை" என்று சொல்லிச் சிவயோக நிலையில் அமர்ந்துவிட்டார்.

பின்னர், நிட்டை நீங்கி, திருமேனியைத் தேடிக் காணாதபோது, "இதுவும் திருவருட்செயல்!" என்று எண்ணி, அரச மரத்தடியில், மூவாயிரமல்ல, எண்ணாயிரம் ஆண்டுகள் இருந்து, ஆண்டுக்கொரு திருமந்திரம் ஆக்கிச் சித்தர்களின் தத்துவத்தைத் திறம்பட விளக்கிவைத்தார் திருமூலர்

*சேர்ந்திருந்தேன் சிவ மங்கை தன் பங்கினை*
*சேர்ந்திருந்தேன் சிவன் ஆவடுதண் துறை*
*சேர்ந்திருந்தேன் சிவ போதியின் நிழலில்*
*சேர்ந்திருந்தேன் சிவ நாமங்கள் ஓதியே*

என்று, திடமாகச் சொல்ல வந்தவர் திருமூலர்

## சிவனே சிவன்

மற்றும், மனத்தை முதலாகக் கொண்ட மனிதன், தான் குடியிருக்கும் மனையாகிய இந்த உடலை, நெடுநாள் வைத்திருக்கவும், தேகத்தின் உள்ளே இருக்கின்ற, சீவனாகிய "சிவனை" அறியவும், மிக எளிதான முறையில், தத்துவ விளக்கம் செய்தவர் சித்தர் திருமூலர்.

## கண்புருவப் பூட்டு

*நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்*

*வாட்டம் இல்லை மனைக்கும் அழிவில்லை*

*ஓட்டமும் இல்லை உணர்வில்லை தானில்லை*

*தேட்டமும் இல்லை சிவன் அவன் ஆமே!*

என்பதும், ஓர் நல்ல விளக்கம். மேலும் சொல்லுகின்ற பொழுது.

*நயனம் இரண்டும் நாசிமேல் வைத்திட்டு*

*உயர்வெழ வாயுவை உள்ளே அடக்கித்*

*துயர் அற நாடியே தூங்கவல் வார்க்குப்*

*பயன் இது காயம் பயமில்லை தானே!*

என்கின்றார்.

இதைதான் ஜோதியடிகள்,

*கையறவி லா துநடு கண்புருவப் பூட்டு*

*கண்டுகளி கொண்டுதிறந் துண்டுநடு நாட்டு*

*ஐயர்மிக உய்யும்வகை அப்பர்விளை யாட்டு*

*ஆடுவதென் றேமறைகள் பாடுவதும் பாட்டு!*

என்கிறார்.

## பேரறிவுப் பீடம்

இரண்டு கண்களுக்கும் இடை நடுவாயுள்ள புருவமத்திய ஸ்தானத்தில், பொட்டு வைத்துக் காட்டும் புண்ணிய பூமியில், பேரறிவுப் பீடமாய் விளங்கும் ஞானக் கோயிலில், ஒரு தெய்வமான இறைவன், சுடர் வடிவாய் நடனம் ஆடிக்கொண்டிருக்கின்றான்.

அதனை, நெற்றிக்கு நேர் கிழக்கே நின்று, அவனாகிய சிவனை, நெஞ்சார நினைத்திடில்.

எல்லாம் செயல் கூடும்

என் ஆணை....!-என்கின்றார்.

*நாத சங்கீத பொன் மணிமண்டபம்*

*நயனத்து இடையினில் நடனம் கண்டேன்!*

*என்று சொன்னது, ஒப்பத் தகுந்த ஒன்றுதானே!*

## சிற்றம்பலம்

இந்த விந்தைமிகும் தத்துவ நிலையினை மிக விளக்கமாகச் சொல்ல வந்தவர், ஞாலம் புகழும் "மாமூலர்" என்றே குறிப்பிட வேண்டியிருக்கிறது. எனவே, நமது இரு புருவங்களின் இடைநடுவே, இறைவன் என்றும் நின்று நடம் புரிகின்றான் என்ற சுத்த தத்துவத்தைச் சுட்டிக் காட்டும் பாடல் இது.

*நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி*
*உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்*
*பற்றுக்குப் பற்றாய் பரமன் இருந்திடும்*
*சிற்றம் பலமென்று தேர்ந்து கொண்டேனே!*
*என்று, மிகத் தீர்க்கமாகச் சொல்லுகின்றார்.*

## முதலும், முடிவானபடியும்

படி ஏறிய பெரியவர்கள் அத்தனை பேரும். இந்தப் படியே தான் சொல்லுவார்கள், ஆம்; இதுதான் முதற்படியும் முடிவான படியுமாகும்.

எத்தனை எத்தனை படிகள் மூலம் ஏறிச் சென்றாலும், இறுதியாக ஏறி அமரும்படி, இப்படித்தான் என்று எப்படியும் ஒரு ஒப்ப முடிந்த தீர்மானத்திற்கு வந்தேயாக வேண்டும்.

அப்படித்தான் திருமூலரின் திருவாக்கு அமையப் பெற்றிருக்கிறது.

## போகர்

அடுத்து, "போகர்" ஒரு பெருஞ்சித்தர். 1600 ஆண்டுகளுக்கு முன்னே சீன தேசத்திலிருந்து வந்த புத்தமத மெய்த்துறவி என்று சொல்லப்படுகிறது.

போகர், திருமூலர், கொங்கணவர், புலிப்பாணி ஆகியவர்களின் காலம் எனக் கருதப்படுகிறது.

அகத்தியரின் மாணாக்கர் என்பது அனைவரும் அறிந்ததே!

காளாங்கி நாதருக்குக் கனமிகும் குருவெனக் கூறுவர்.

சீனத்திலிருந்து, பாரத நாட்டுக்கு வந்து, பாடலிபுரம், கயா முதலிய இடங்களைக் கண்டு, தரிசித்து, சோழநாடு-பாண்டிநாடு ஆகிய பல்வேறு நாடுகளையடைந்து, ஆங்காங்குள்ள சித்தர்கள் கூட்டத்துடன் சேர்ந்து, கற்க வேண்டியவைகளைக் கற்று, கற்பிக்க வேண்டியவைகளைக் கற்பித்து, ஒரு சில தமிழகச் சித்தர்களுடன் மீண்டும் சீனம் சென்றார் என்பர்.

வைத்தியக் கலையில் வல்லவர்.

## ரசம் அவரது வசம்

"பெருஞ்சித்தர்" எனப் பெயர் பெற்றவர். சப்தசாகரங்களையும் கடந்து சென்று, சஞ்சீவி மூலிகைகளைக் கண்டுபிடித்தவர்.

மேருபருவதம் கடந்து, மேலான தாதுவகை மூலிகைகளைக் கொண்டுவந்தவர் போக முனிவர். வனராஜாவெனச் சொல்லும் சினமிக்கச் சிங்கத்திற்கும், வலி மிகுத்த புலிக்கும், ஏன்? பூனைக்கும், பசுவுக்கும் கூட ஞானோபதேசம் செய்தவர் போகர் எனப் பகலுவர்.

ரசம், அவரது வசம், கட்டுப்பட்டது நிசம்.

## பழநி ஆண்டவர்

சிவ பெருமான் தட்சிணாமூர்த்தியாய் எழுந்தருளி அம்மைக்கு உபதேசித்த அருண்மொழி ஏழு லட்சத்தை, ஏழு காண்டங்களாக்கி தமது மாணாக்கார்களுக்குச் சொல்லிவைத்தார்.

பழநியம்பதியில், நவபாஷாணத்தைக்கொண்டு ஆண்டவன் தண்டாயுதபாணியின் அருளுருவினை அமைத்துச் சித்தாடச் செய்தவர் போகர் பெருமான்தான் என்பது உலகப் பிரசித்தம்.

மற்றும், வேங்கட மலைக்கு கொங்கண முனிவரை அனுப்பி, அங்குத் திருமலை மேல், செவ்வேட் பரமனைத் தாபனம் செய்து செல்வம் கொழிக்க வைத்தவரும் சித்தர் செழும் போகரேயாவர். புத்த சமயத்தவர் பூரண ஞானத்துறவு பூண்டவர்.

## புலிப்பாணி

இவர், போகருடைய சீடர். சிறந்த ஞானத்தோடு சீனத்திலிருந்து வந்தவர். ஆனால், போகர் திரும்பிப் போகும்போது இவர் தமிழ் நாட்டிலேயே தங்கிவிட்டார். வைத்தியம் ஜாலவித்தையில் வல்லவர். கிலிதரும் புலியின் கிட்ட நெருங்கி அதனுடன் நல்ல நட்பு கொண்டிருந்தார். தெள்ளிய தண்ணீரைத் திரட்டிக் கையில் வைத்துக் கொண்டார். மூலர் காலம் என மொழிவர். போகருடன் வக்காவூரில் வாழ்ந்தவர்.

## கொங்கணவர்

மாண்புமிக்க போக மகிரிஷியின் மாணாக்கர் சிவலிங்கத்தைப் பூசித்துச் சிறந்த குளிகை பெற்றவர். சிலையைப் பெண்ணாக்கிக் குருவிடம் கொடுத்தவர். திருமழிசை ஆழ்வாருடன் சேர்ந்துப் பழகியிருந்தவர். நீண்ட காலத்திற்கு முன்னே நிலைபெற்று நின்றவர். குறுமுனியும் இவரது குருவாவார்.

“கொக்கென்று நினைத்தாயோ கொங்கணவா?” என்று வள்ளுவரின் துணைவி சொன்ன வார்த்தையிலிருந்து இவரது தவ நிலை விளங்குகிறது. இவர் பெயரால் “கொங்கணகிரி” என்றே ஒரு மலையுளது.

கொங்கு நாட்டில், ஊதியூர் மாமலையில் வசித்தவர். கைலாய மரபில் தோன்றியவர். திருப்பதியில் ஜீவ சமாதி கொண்டவர். சாக்தேயர்

*"உச்சிக்கு நேராய் உண்ணாவுக்கு மேல் நிதம்*

*வச்ச விளக்கும் 'எரியுதடி"*

என்று வாலைப் பெண்ணை வைத்துப் பாடுவார்.

## தேரையர்

தரும சௌமியரின் மாணாக்கர். அகத்தியரிடம் மருத்துவ முறை கற்றுத் தேர்ந்தவர். பதார்த்த குண சிந்தாமணி செய்தவர். நெய்க்கறி-தைல வருக்கச் சுருக்கம் கஷாயம் நூறு-சிகிச்சை ஆயிரம் பாடியவர். கபால சல்லியத்தில் வல்லவர். நோயணுகா விதி எழுதியவர். வாதம் செய்வதில் மேதை.

மன்னன் ஒருவனின் மண்டைக் குத்தலை நீக்க, சம்மோ கினியைப் பிரயோகித்து, கபாலத்தைத் திறந்து அமிர்தத்தில் இருந்த தேரையை நீர்க் கிண்ணத்தில் குதிக்கச் செய்து பின், சந்தானகரணி என்னும் மூலிகையினால் திறந்த கபாலத்தைப் பொருத்தித் "தேரையர்" என்னும் சிறப்புப் பெயர் பெற்றார் எனச் செப்புவர்.

## புலத்தியர்

"புல" என்று சொல்லும் தவத்தால் புகழ் பெற்றவர் புலத்தியர். பிரம்மாவின் மாணக்க புத்திரர்களுள் ஒருவர் கிரணபிந்துவின் குமாரி அவிர்புக்கு என்பவளை மணந்தவர்.

கார்த்த வீரியனால் சிறையிடப்பட்ட இராவணனை மீட்டு வந்தவர்.

விசிர வசுவின் தந்தை புராணங்களை வெளியிட்டவர் புலத்தியர்.

பாம்பாட்டிச் சித்தர்

*நாதர்முடி மேலிருக்கும் நாகப் பாம்பே!*
*நச்சுப் பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே!*
*பாதாளத்தில் குடிபுகும் பைகொள் பாம்பே!*
*பாடிப்பாடி நின்றுவிளை யாடு பாம்பே!*

மூலாதாரத் தண்டினின்றும் குண்டலினி சக்தியை எழுப்பி அதனைப் பாம்பாகப் பாவித்து ஆட்டிக் காட்டியவர் பாம்பாட்டிச் சித்தர்.

இவர், திருக்கோகர்ணத்தில் தோன்றியவர். கொங்கு நாட்டில் உள்ள மருத மலையில் நீண்ட காலம் நிட்டை கூடி நின்று கடுந்தவம் செய்தவர்.

பாம்பாட்டிக் குகை என்று ஒன்று இருப்பதை இன்றும் பார்க்கலாம்.

சட்டமுனியின் சீடர். தத்துவஞானத்தைத் தெள்ளிய தமிழில் வெள்ளையாகப் பாடி விளக்கிவைத்தார்.

காட்டில் உள்ள பாம்புகளைப் பிடித்து ஆட்டிக் காட்டி அதனிடையே சித்தர்களின் தத்துவத்தைச் சிறப்பாக வெளிப்படுத்தினார்.

ஒளிமிக்க மணியினை உச்சியில் வைத்திருக்கும் நச்சுப் பாம்பினைப் பிடித்து நாத கீதம் பாடிக்கொண்டிருந்தபோது சட்ட முனியிடம் தீட்சை பெற்றுச் சமாதியில் இருந்து மீண்டும் எழுந்து , பல வகையான சித்துக்களைச் செய்து கணங்களுடன் சேர்ந்து களிப்புற்றவர்.

அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்த அற்புதச் சித்தர். கூடுவிட்டுக் கூடுபாயும் வித்தை கற்றவர்.

சித்தர் ஆருடம், வைத்திய சாத்திரம் செய்துள்ளார்.

## இடைக்காடர்

இடைக்காட்டில், இடையர் குடியில் பிறந்தவர். அண்ணாமலையில் தோன்றியவர் என்றும், ஆனாய நாயனார் என்றும் கூறுவர்.

பொதிய மலை அருகே, ஆடு மேய்த்துக் கொண்டிருந்தபோது, நவநாத சித்தர்களில் ஒருவர், பக்குவமறிந்து வலிந்து வந்து ஞானோபதேசம் செய்தார்.

அது முதல் இவர், "இடைக்காட்டுச் சித்தர்" என்னும் பெயரில், அற்புதச் சித்திகள் செய்து நீண்ட காலம் நிலைபெற்று நின்றார் என்று தெரிகிறது.

ஆடு மாடுகளைக் கிடைகட்டி ஜீவர்களாகிய பசுவின் பால் கறந்து, சித்தர் பெருமக்களும் உண்டு மகிழ உதவிபுரிந்தார் என்பர்.

தாண்டவக்கோன்- நாராயணக்கோன் ஆகியவர்களை

முன்னிலைப்படுத்தி, ஆனந்தக்கோன் பாடல் பாடி ஆடியவர்.

*சாவா திருந்திடப் பால்கற-சிரம்*
*தன்னில் இருந்திடும் பால்கற!*
*வேவா திருந்திடப் பால்கற!-வெறும்*
*வெட்ட வெளிக்குளே பால்கற!*
*என்று, அமிர்தப் பால் கறந்து அருந்தியவர்!*

கொங்கணவரின் மாணவர் எனக் கூறுவார்கள். போகரிடமிருந்தும் ஞான போதம் பெற்றவர்.

திருமாலின் பத்து அவதாரங்களில், வணங்கத் தக்கது எதுவோ? என்று சித்தர்கள் கேட்ட பொழுது. இவர் "ஏழை இடயன் இளிச்சவாயன்" என்று பதில் இறுத்துச் சிரித்தார்.

புரிந்து கொள்ளும்படி, சிரித்த அந்தச் சிரிப்பில் எத்தனையோ பொருள்கள் பொதிந்திருக்கின்றன.

பஞ்சம் மிஞ்சிய நிலையில், மாறுபட்டுக் கிடந்த கோள்களை மாற்றி அமைத்து, மழை பொழியச் செய்து, மக்கள் இனத்திற்கு மகிழ்ச்சியூட்டியவர் இடைக்காடர்.

*மனமெனும் மாடு அடங்கில்*

*தாண்டவக் கோனே!-முத்தி*

*வாய்த்த தென்று எண்ணடா*

*தாண்டவக் கோனே!*

*சினமெனும் பாம் பிறந்தால்*

*தாண்டவக் கோனே!-யாவும்*

*சித்தியென்றே நிலையடா*

*தாண்டவக் கோனே!*

என்று, கோன் பாட்டுப்பாடி, ஞானத் தேன் ஊட்டி மகிழ்வித்தார்.

## கருவூரார்

கொங்கு மண்டலத்தைச் சார்ந்த, வஞ்சி நகர் என்று சொல்லும் கரூரில் தோன்றியவர். விசுவ கர்மா-மிக்க அழகு வாய்ந்தவர். வாலை-மனோன்மணியை வசப்படுத்திக் கொண்டவர். ஏனைய தெய்வங்களும் இவர்பால் ஈடுபாடு கொண்டிருந்தன. அகத்தியனாரை அண்டியிருந்தார். போகரின் சிறந்த மாணாக்கர். வைத்தியத் துறையில் வல்லவர். சென்ற ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவர். பொதிய மலையில் வாசம் புரிந்து வந்தவர்.

## அஷ்டபந்தனம்

தஞ்சையில் இராஜராஜசோழன் கட்டிய கோயிலில் சிவலிங்க ஸ்தாபனம் செய்து, அஷ்ட பந்தன கும்பாபிஷேகம் செய்தவர். பெரும் சித்தர்.

ஆச் சென்றால் அதனாலே வருவதேது?

ஆத்தாளை பூசித்தோன் அவனே சித்தர்?

என்ற முடிவுக்கு வந்து, இறையருளுடன் இரண்டறக் கலந்தவர்.

## அகப்பேய்

பேய் போல் அலையும் மனத்தைப் பிடித்து நிறுத்தியவர். உயர்ந்த ஞான தத்துவங்களை உள்ளத்திற்கு உணர்த்தியவர்.

*வானம் ஓடிவரில் – அகப் பேய்!*

*வந்தும் பிறப்பாயே!*

*தேனை உண்ணாமல் அகப் பேய்!*

*தெரு வோடலைந்தாயே!*

*தன்னை அறிய வேணும் அகப்பேய்!*

*சாராமற் சாரவேணும்*

*பின்னை அறிவதெல்லாம்-அகப்பேய்!*

*பேயறி வாகு மடி!*

என்று பாடி, சித்தர் கூட்டத்தைச் சேர்ந்திருந்தவர்.

## குதம்பையர்

"குதம்பை" என்ற அற்புதமான காதணியுடன் விளங்கும். குமரி ஒருவளிடம் கூறும் நிலையில், உத்தமமான ஞான தத்துவங்களை உரைத்து, குதம்பைச் சித்தர் எனப்பெயர் பெற்றார்.

*மாங்காய்ப் பால் ,உண்டு*

*மலை மேல் இருப்பார்க்குத்*

*தேங்காய்ப் பால் ஏதுக்கடி!-குதம்பாய்!*

*தேங்காய்ப் பால் ஏதுக்கடி!*

*அட்டாங்க யோகம்*

*அறிந்த மெய்ஞ் ஞானிக்கு*

*முட்டங்காம் ஏதுக்கடி!-குதம்பாய்!*

*முட்டங்காம் ஏதுக்கடி!*

என்று பாடி, உலகம் அறிந்த ஒரு பெருஞ்சித்தராக விளங்கியவர்.

## சட்டை நாத சித்தர்

போகருடைய மாணாக்கர் வாலைச்சாமியின் குருவாவார். உரோமரிஷியின் எண்ணத்திற்கு மாறுபட்டவர். காரணம் இவருடைய போக்கும், நோக்கும் வேறு. தனி அநுபவசாலி, அகத்தியரையும் அறிந்தவர், மருத்துவ மேதை, நவரத்தின வைப்பு முதலிய அநேகம் நூல்கள் ஆக்கியவர்.

இவர், கயிலாய பரம்பரையில் வந்த கம்பளிச் சட்டை முனி என்பவர்.

கொங்கணவரை மிகவும் உயர்த்திக் கூறுவர்.

கயிலாய பரம்பரையாய் வந்த பேர்க்குக்

கடைப்பிள்ளை ஞானத்தைப் பாடுவேனே!

எனச் சுட்டிக் காட்டுவார்.

## உரோம ரிஷி

தேகம் முழுவதும் அடர்ந்த உரோமம் நிறைந்தவராக விளங்கியவர். 1500 ஆண்டுகளுக்கு முற்பட்டவர்.

பிரம்ம தேவன் ஒருவன் மறைந்தால், இவருக்கு ஒரு உரோமம் உதிருமாம்! அவ்வாறு, 31/2 கோடி பிரமர்கள் மறைந்த பின்னரே இவரது முடிவு எனச் சொல்லப்படுகிறது.

அகத்தியர்-புகண்டர்-சட்டை முனிகளை அறிந்தவர்.

## காக புசுண்டர்

காக்கை போல் பார்க்கும் ஓரப்பார்வை பெற்றிருந்தார்.

காணாத காட்சியெல்லாம் கண்ணில் கண்டு

காகமடா புகண்டர் எனப் பேரும் பெற்றேன்

என்று பேசுவார்.

ஆதி சித்தர்களின் வரிசையில் வந்தவர். கண்ணுதற் கடவுள் இவரை வாரி எடுத்து முத்தமிட்டு கயிலையில் என்றும் இருக்கச் சொன்னான் என்பது வரலாறு.

பல யுகங்களைக் கண்டவர். திருமால் அவதாரம் பத்தும் பார்த்தவர். தேவர்கள் கடல் கடைந்த திறம் தெரிந்தவர்.

எட்டு வசிட்டர்களின் தோற்றத்தை இவர் கண்டவர். மிக்க மகத்தான சித்தர்.

## கோரக்கர்

மச்சேந்திர நாதரின் மாணாக்கர். காய கற்பம் உண்டு, கட்டான தேகத்துடன் வாழ்ந்தவர்.

அல்லமரை அடைந்து ஆனந்தம் கொண்டவர்.

கஞ்சா அருந்துவதில் கனபிரியர். அதனால், கஞ்சாவுக்குக் 'கோரக்கர் மூலிகை' எனப் பெயர் வந்தது.

வடநாட்டில் வாழ்ந்த நவநாத சித்தர்களுள் இவர் ஒருவர். ஆயிரம் ஆண்டுகளுக்கு அப்பாற்பட்டவர்.

## சிவ வாக்கியர்

மண்ணில் பிறந்தபோதே, மங்கள மொழியாகிய "சிவ சிவ" என்னும் மந்திரத்தைச் சொல்லிக் கொண்டே பிறந்தவர். அதனால், இவர் "சிவ வாக்கியர்" என்னும் சிறப்புப் பெயர் பெற்றார்.

கொங்கணவர் காலத்தவர் எனக் கூறப்படுகிறது. குறப் பெண்ணை மணந்தார் என்பர்.

வைணவத்தினின்று, சைவத்திற்கு வந்தவர் அருமையான சித்து நூல் பாடியவர்.

## தன்வந்திரி

இரண்டாம் நூற்றாண்டில் இருந்தவர். காசி மகா ராஜனின் மகன் என்பர். விக்கிரமாதித்தனின் ஆஸ்தானத்தை அலங்கரித்தவர்.

நவரத்தினம், நிகண்டு ஆகிய நூல்களை ஆக்கியவர்.

## திருமாளிகைத் தேவர்

போக மகா முனிவரின் புகழ் பெற்ற மாணாக்கர். குரு மூர்த்தியின் கட்டளைப்படி, சைவ சமயம் தழைத்தோங்க ஆவடு துறையில் , அழகிய மடம் ஒன்று அமைத்துக்கொண்டு ஆங்கே நவகோடி சித்தர்களுக்கும் நல்லிடம் கொடுத்து வந்தவர்.

சேந்தனாரோடு தில்லைச் சிதம்பரம் சென்று, சிவதரிசனம் செய்து பாடிப் பரவி, இறந்த பிணத்தை எழுப்பிக் கொடுத்தார்.

## மச்சேந்திரர்

இரசவாத வித்தையில் கைதேர்ந்தவர். ஞான சாத்திரம் உணர்ந்தவர்,"மச்ச முனி வைப்பு" என்ற நூல் செய்தவர்.

அகத்தியரை அறிந்தவர், போகரின் புதுமைமிக்க மாணவர்.

ஆழ்கடல் அருகில், பரமேஸ்வரன், பார்வதிக்கு தாரக மந்திரத்தை உபதேசித்த நேரத்தில் தாய், அயர்ந்து தூங்கி விட்டாள். ஆனால், அந்த மாந்திரம் ஒரு மீன் வயிற்றில் உள்ள குழந்தையின் காதில் விழுந்தது. மானிட வடிவுடன் வெளி வந்தது.

சிவ பெருமான் அப்பிள்ளைக்கு "மச்சேந்திரன்" எனப் பெயரிட்டார்.;

இவரே, மச்சமுனி எனப் பேசப்படுபவர். கோரக்கரின் குரு. சித்துக்கள் பல செய்து காட்டியவர். சித்தர் இனத்தைச் சேர்ந்தவர்.

## மகத்துவம் மிகுந்தவர்கள்

இன்னும், பூனைக்கண்ணர், புண்ணாக்கீசர், புலிக்கையீசர் போன்றவர்களும்., இந்த வரிசையில் வந்த மகத்துவம் மிகுந்தவர்களே!

## சிங்கார சொரூபி

இதனில், சரியா சித்தர்-கிரியா சித்தர்-யோக சித்தர் ஞானசித்தர் என நான்கு வகையினர் உண்டு.

ஞான சித்தர், இறப்பு-பிறப்பு என்பதினை அறவே அகற்றியவர், “ஓங்கார சொருபி” என்பர்.

மாற்றறியாத செழும் பொன் என்று சொன்னாலும் பொருந்தும்.

தேகம் இருக்கின்றபோதே பெறுவதுதான் “சீவன் சித்தி நிலை” என்பது சித்தர்களின் தத்துவம்.

*உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்*

*உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்*

*உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று*

*உடம்பினை யான் இருந்து ஓம்புகின்றேனே!*

என்பது திருமந்திரம்.

*“மரணமிலாப் பெருவாழ்வு”*

என்பது, சித்தர்களின் சொந்த சொத்து-அத்துடன், சித்தர்கள் சிறந்த- இசை ஞானிகளாகவும் திகழ்ந்திருக்கிறார்கள்

## பரம்பரை

அப்பர்-சம்பந்தர்-சுந்தரர்-மாணிவாசகர் ஆகிய அத்தனை பேர்களும், உடலுடன் இறையிடம் ஒடுங்கியவர்கள் தானே?

ஆண்டாள், அரங்கநாதனுடன் சேர்ந்து அமையவில்லையா? முத்துத்தாண்டவர், மணிவாசகரைப் போல் பெருவாழ்வு பெற்றார். திருவெண்காடர் திருவொற்றியூரில் ஜீவ சமாதியடைந்தார். தாயுமானவர் ஒரு தனி நிலையடைந்தார். பாம்பனடிகள் ஐந்நூறு ஆண்டுகள் இப்பதியில் இருப்பேன் என்றார். இவ்வாறு சித்தர் பரம்பரையினர் சிறப்புற்று விளங்குகின்றார்கள்.

## பாண்டிநாதர்

சென்ற நூற்றாண்டில், தில்லைப் பெருவெளியில் பாண்டியநாத சித்தர் என்று ஒரு பெரிய மகான் இருந்தார். அவர், திருவருள் திறத்தால் திருநீறு தந்து முருகன் ஆலயத்தைக் கட்டி முடித்தார்.

குடமுழுக்கன்று, பல்லாயிரம் பரம சாதுக்களுக்கு அன்னம் பாலிக்கத் தீர்மானித்தார். அதன்படியே ஆலயத்தைச் சுற்றிலும் இலை போட்டு, அடியவர்களை அமர்த்தி, அன்னம் படைத்து அருந்தப் போகும் சமயத்தில், கொஞ்சம் பொறுத்திருங்கள் "வடலூர் அருட் சித்தர்" வந்து அமர்ந்த பிறகு எல்லோரும் உண்ணலாம் என்றார். ஒப்புக் கொண்டனர்.

## சமரச ஞானி

சித்தரால் அமைக்கப் பெற்ற திருவுருவான "பாண்டிய நாயகம்" என்னும் முருகப் பெருமானின் அருகே ஒரு தனி இலை போட்டு அன்னம் படைக்கப் பெற்றுள்ளது. ஆனால், அந்த இலைக்கு அதிகாரி யாருமில்லை.

இந்த நிலையில், பாண்டிய நாத சித்தர் வடலூர்ப் பெரு வெளியில் உள்ள வள்ளலாரை நெஞ்சார நினைத்தார். அருட் சோதி ஐயனே! இந்தப் பெருஞ்சோற்றுப் படைப்பில் கணக்கற்றவர்கள் கலந்து கொண்டுள்ளார்கள். ஆனாலும், உண்மைத் தத்துவம் உணர்ந்த சமரச சுத்தசன்மார்க்க சித்தராகியத் தங்களுக்காகப் போட்டிருக்கும் தலை வாழை இலையில் அமர்ந்து, ஒரு பிடி அன்னம் தாங்கள் சாப்பிடப் பலனாகும் என்று, வாய்விட்டுச் சொல்லி, ஒரு கணம் மௌனமாக இருந்தார்.

## அமுதருந்தல்

ஆஹா! என்ன வியப்பு! சிதம்பரத்திலிருந்து வேண்டிய சித்தரின் முறையீட்டுக் கிரங்கி, அந்தக் கணமே வடலூரிலிருந்த கருணை வள்ளல், உடனாக எழுந்து வந்து காட்சியளித்து.

இலையில் அமர்ந்து, பாண்டியநாதரின் திருவுள்ளப்பாங்கின்படி, ஆனந்தமாய் அமுதருந்தி, சிறிது நேரத்தில் மறைந்தருளினார். இது வரலாறு கண்ட வாய்மை.

எனவே, இராமலிங்க பெருமான், இறுதியாக வந்த "ஞான சித்தர்" என்பதில் சிறிதும் ஐயமில்லை.

*காற்றாலே புவியாலே ககனமத னாலே*
*கனலாலே புனலாலே கதிராதி யாலே*
*கூற்றாலே பிணியாலே கொலைக் கருவியாலே*
*கோளாலே பிற இயற்றும் கொடும் செயல்களாலே*
*வேற்றாலே எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும்*
*மெய்யளிக்க வேண்டுமென்றேன் விரைந்தளித்தான் எனக்கே*
*ஏற்றாலே இழிவெனநீர் நினையாதீர்! உலகீர்!*
*எந்தையருட் பெருஞ்சோதி இறைவனைச் சார்வீரே!*

என்று, தனது. தத்துவநிலையினைச் சாங்கோபாங்கமாகச் சொல்லுகின்றார்.

## சற்குருமணி

*சாகாத தலைஇது வேகாத காலம்*
*தரம்இது காணெனத் தயவுசெய் துரைத்தே*
*போகாத புனலையும் தெரிவித்தென் உளத்தே*
*பொற்புற அமர்ந்தோர் அற்புதச் சுடரே!*

என்றும்

*தத்துவ மசிநிலை இதுஇது தானே*
*சத்தியம் 'காண்' எனத் தனித்துரைத் தெனக்கே*
*ஏத்துவந் தனைகளும் நீக்கிமெய்ந் நிலைக்கே*

*ஏற்றி நான் இறவாத இயல் அளித்து அருளால்*

*சித்துவந்து உலகங்கள் எவற்றினும் ஆடச்*

*செய்வித்த பேரருட் சிவருட் சிவபரஞ் சுடரே!*

*சத்துவ நெறிக்கு வடலருட் கடலே!*

*தனிநட ராஜ என் சற்குரு மணியே!*

என்றும், இறையருளைப் போற்றிப் புகழ்கின்றார்

## உத்தம மனிதன்

மற்றும், ஒற்றியூரில் நிருவாணயோகி ஒருவர் வந்து, நீண்டகாலம் தங்கியிருந்து, ஆங்கு, வருவோர் போவோரையெல்லாம் பார்த்து. ஆடு போகிறது! மாடு போகிறது! கழுதை போகிறது! குதிரை போகிறது! நாய் போகிறது! பேய் போகிறது! என்றெல்லாம் வாய்க்கு வந்தபடி பிதற்றிக் கொண்டிருந்த சமயம்.

ஒருநாள், வள்ளல் இராமலிங்கப் பெருமாள் அவ்வீதி வழியே சென்றபோது, மானத்தை மறைத்த வண்ணம், திண்ணையிலிருந்தும் எட்டிக் குதித்துக் கட்டிக் தழுவிக் கொண்டு, "இதோ! உத்தம மனிதனாகிய சித்தன் ஒருவனை இன்று தான் தரிசிக்கப் பெற்றென்!" என்றார்.

## தோ பா

பின்னர், இருவரும் கலந்து பேசிக் களிப்படைந்தனர் என்பது சரித்திரச் சான்று.

இப்பெரியாரைத் தான் "தோ பா" சுவாமிகள் என்று சொல்வது.

## ஞான சித்தர்

"தோ- என்று தொடங்கும், பா- பாட்டினை" திருஞான சம்பந்தர் பாடிய, "தோடுடைய செவியன்" என்னும் தேவாரப் பாசுரத்தினை, எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருக்கின்ற இயல்பினையுடையவர் அந்த அவதூதர்.

எனவே, அவர் பெயர் என்ன? என்று கேட்ட பொழுது, என் பெயர் தோ பா என்று சொன்னார். அதனால் அப் பெரியாரை "தோபா சுவாமிகள்" என்று உலகம் சொல்லத் தலைப்பட்டது.

அவர், வெல்லும் மயிலையில் இருந்து, வேலூரில் சமாதி நிலையடைந்தார். இந்த வரலாற்றிலிருந்து, அருட்சோதியண்ணல், ஒரு அற்புதமான பொறபமைந்த சிற்பர ஞான சித்தர் என்று நமக்கு விளங்குகிறதல்லவா?

## சாகாத மார்க்கம்

**அடிகளாரது தத்துவம்**

**சன்மார்க்கம் ஒன்றே**

**சாகாத மார்க்கம்!**

**என்பதாகும்**

**என்மார்க்கம் இறப்பொழிக்கும்**

**சன்மார்க்கம்...!**

என்கின்றார்.

## இனிப் பிறப்பதில்லை

*உருத்தரித்த நாடியில் ஒடுங்குகின்ற வாயுவைக்*

*கருத்தினால் இருத்தியே கபாலம் ஏற்ற வல்லீரேல்*

*விருத்தரும் பாலராவர், மேனியும் சிவந்திடும்*

*அருள்தரித்த நாதர் பாதம் அம்மை பாதம் உண்மையே!*

என்பது, சித்தர் சிவ வாக்கியரின் தெய்வீகத் தத்துவத் திருவாக்காகும்.

மேலும்,

*இல்லை இல்லை இல்லையென்று இயம்புகின்ற ஏழைகள்!*

*இல்லையென்று நின்றதொன்றை இல்லை என்னல் ஆகுமோ?*

*இல்லை அல்ல ஒன்றும் அல்ல இரண்டுமொன்றி நின்றதை*

*எல்லைகண்டு கொண்டபேர் இனிபிறப்ப தில்லையே!*

என்கிறார்

## உயர்ந்த மருந்து

*பிறவாதிருக்க வரம்பெறல் வேண்டும்*

*பிறந்து விட்டார்கள்,*

*இறவாதிருக்க மருந்துண்டு காண்! அது*

*எப்படியோ?*

*அறமார் புகழ்த்தில்லை அம்பல வாணன்*

*அடிக் கமலம்,*

*மறவா திருமனமே! அது காண்! நான்*

*மருந்துனக்கே!*

என்பதும், பட்டினத்துப் பிள்ளையின் பழுத்த அநுபவ வாக்கு.

*ஒன்றென் றிரு! தெய்வம் உண்டென்றிரு! உயர்*

*செல்வமெல்லாம்*

*அன்றென்றிரு! பசித்தோர் முகம் பார்! நல்*

*அறமும் நட்பும்,*

*நன்றென்றிரு! நடு நீங்காமலே நமக்கு இட்டபடி*

*என்றென்றிரு! மனமே! உனக்கே உபதேசமிதே!*

என்பது தத்துவம்.

## லாடப்பா

மற்றும், சித்தர்களிலே மிகச் சிறந்த "மகா சித்தர்" ஒருவர். அவர் பெயர் "லாடப்பா" என்பார்கள்

கலி பிறக்க, ஒரு முகூர்த்தத்திற்கு முன்னே, உமா மகேஸ்வரனின் பிரதி சொரூபமாய்ப் பிறந்தவர்.

லாட குருபரர், லாடச் சித்தர் என்றும் கூறுவார்கள்.

உடலுடன், கடல் கடந்து உத்தமச் சித்தர் கூட்டத்தின் ஒரு பெருந் தலைவராய் இன்றும் நின்று விளங்குகின்றார் என்பது பிரசித்தம்.

## புதுமைச் சித்தர்

ஆழ்கடல் நடுவே, அந்தமில் இன்பமுடன், சந்தனமா மலையில் சார்ந்திருக்கின்றார்.

நாகலாந்தில் உள்ள நாகர்கள் அவரை நன்கு உணர்வார்கள்.

கலியுகத்தில், கண்கண்ட தெய்வமாய்க் காட்சியளிக்கின்றார்.

ஏவல்-பில்லி-சூனியம்-பிணி-துன்பம் இவைகள் அகல, இவர் பெயரைச் சொல்லிப் பூசித்தால் போதும். கைமேல் பலன் காணலாம்.

*சந்தனமாமலை தங்கி விளங்கிடும்*

*சற்குரு சரணம் லாடப்பா! – நாளும்*

*தன்புகழ் பெருகிட ஒன்பது படியுட*

*தங்கத் தலம் வளர் லாடப்பா!*

*விந்தை மிகுந்திடும் சிங்கைப் பதியினில்*

*வீற்றிருந் தருளும் லாடப்பா!–உயர்*

*விண்ணவர் மண்ணவர் சித்தர் காணத்தவர்*

*வேண்டி வணங்கிடும் லாடப்பா*

என்று, "புதுமைச் சித்தர் பொக்கிஷம்" புகலும்

## போரூர் புனிதர்

இன்னம், சித்தர் கூட்டத்தைச் சேர்ந்தவர்களில் ஒருவர். “போரூர் ஞானப் புனிதர்” எனப் போற்றப் பெறும் இதம் தரும் சிதம்பரர் என்பார்.

சென்ற 300 ஆண்டுகளுக்கு முன்னே, மதுரை நகரில் பிறந்தவர். பொய்யடிமையில்லாத புலவர் வழி வந்தவர். கல்வியில் கரை கண்டவர். அம்பிகையின் அருள்பலத்தால் குமார தேவரை குருவாகக் கொண்டு, பேரூர் சாந்தலிங்க சுவாமிகளின் தயவினைப் பெற்று, திருப்போரூருக்கு எழுந்தருளிய முருகப் பெருமானின் திருக்கோயில் கண்டு, திருப்பணி செய்து, இறுதியில், சுரங்கத்தில் இறங்கி, ஜீவ சமாதி நிலையில், கற்பூர ஒளியில், கந்தப் பெருமானுடன் இரண்டறக் கலந்தருளினார்.

## வீரப்பிரம்மம்

சிறந்த மகா சித்தர், ‘‘வீரப்பிரம்மம்’’, சென்ற 500 ஆண்டுகளுக்கு முன்னே வாழ்ந்தவர். ஆந்திர நாட்டில் அதிகப் புகழ் பெற்றவர். 1593-ஆம் ஆண்டில் பொற்கொல்லர் மரபில் தோன்றியவர்.

தாய் - பிரகந்தாம்பாள்.

## தந்தை-பரிபூரண ஆச்சாரியார்

போத்தலூரி-வீரப்பிரமங்காரு, அடர்ந்த காட்டில் அவதாரம் செய்தவர். அதி இளமையில் தாய் தந்தையரை இழந்த அநாதையானார். பராசக்தி பாலூட்ட, பரமேஸ்வரனால் வளர்க்கப் பெற்றார்.

## வினைகளை விலக்கி வைத்தார்

அக்காலத்தில் அரசாண்டு வந்த நவாபுகளின் அரண்மனைகளில் அமைதியாக வாழ்ந்து வந்தார்.

அவர்களின் ஆட்சி, மாட்சி பெறச் செய்தவரும் இந்த மகானுபவரே.

சித்துடைச் செல்வர். பல்பேருடைய தீராத நோய்களைத் தீர்த்து வைத்தார். கண் இழந்தவர்களுக்குக் கருணையுடன் கண் கொடுத்தார்.

## நீண்ட வயது

எண்ணி, 175 வயது வரை இனிது வாழ்ந்திருந்தார். திருமணம் செய்துகொண்டார்.

துணைவியின் பெயர் திருமதி கோவிந்தம்மாள்.

நான்கு ஆண் பிள்ளைகள்.

பெண் பிள்ளைகளும் உண்டு.

## காலக் கியானம்

உலகில், இனி எதிர்காலம் எப்படியிருக்கும் என்பதினை விளக்கி, "காலக் கியானம்" என்னும் ஓர் அற்புத நூலினைப் பனை ஓலையில், முள் கொண்டு எழுதி, ஊரெங்கும் சென்று உபதேசித்து வந்தார்.

## ஜீவ சமாதி

இறுதியில், கடப்பா ஜில்லாவில் பத்து வேலு தாலுகாவினின்றும் பத்துக்கல் தொலைவில் உள்ள "கந்திமல்லய்யப்பள்ளி" என்னும் சிற்றூரில், ஒரு வைகாசி தசமியில் ஜீவ சமாதி நிலையடைந்தார்.

## சுத்த தேகம்

சீத்தயாவென்னும் ஓர் சற்சீடரைப் பெற்றிருந்தார்.

நிட்டை கூடிய பின், பத்து மாதங்கள் கடந்து-தன் இளையமகன் போத்தலூரி ஐயா என்பவர் சமாதியினைச் சோதித்துப் பார்த்த பொழுது, சுத்த தேகத்தோடு, சித்துப் புருஷராய், சுடரொளியுடன் விளக்கம் தந்தார்.

## சுமங்கலி

ஆருயிர்த் 'துணைவியார்' கோவிந்தம்மாள். தன் காலம் முழுவதும் சுமங்கலியாகவே இருந்து வந்தார். வாக்களித்த வண்ணம், பிரம்மம், இன்னும் பொன்றாப்புகழுடன் நின்று விளங்குகின்றார்.

## ஏட்டிலும், பாட்டிலும்

இவ்வாறு, சித்தர்களின் உண்மைத் தத்துவம் மிக்கச் சிறப்பான முறையில், ஏட்டிலும், பாட்டிலும் இருப்பதன்றி உலக அநுபவத்திலும் உயர்வாக விளங்கிக் கொண்டிருக்கின்றது.

## மரணமிலாப் பெருவாழ்வு

சித்தர் பெருமக்கள், ஸ்திரஜீவிகளாய், எங்குமாய், ஏகமாய், இன்பமயமாய் இருக்கத்தான் செய்கின்றார்கள்.

சூக்கும உடலுடன், தோன்றாத் துணையாய், அநேகருக்கு, ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகின்றார்கள் என்பது சரதம்.

மரணமிலாப் பெருவாழ்வு பெற்றவர்கள் மகான்கள், உத்தமர்கள், தத்துவ ஞான சித்தர்கள்.

*முத்தியைப் பெற்றேன்,அம் முத்தியினால் ஞான*

*சித்தியைஉற்றேன் என்று உந்தீபற!*

*சித்தனும் ஆனேன் என்று உந்தீபற!*

என்பார் வள்ளலார்.

வாழ்க வையகம்.

# சித்தர் நெறி

டாக்டர் ரெ.மு

**நா**ம் இறைவழிபாடு செய்யத் திருக்கோயிலுக்குச் செல்கின்றோம். அங்கு இறை உருவை மறைத்துத் திரையிடப்பட்டுள்ளது. காலை வழிபாடு தொடங்க இருக்கின்றது. திருவிளக்கினை ஏற்றுகின்றார்கள். ஒலி எழுப்புகின்றார்கள். திருவிளக்கினை ஏந்திக் காட்டுகின்றார் அர்ச்சகர். அவ்வொளியில் இறைவன் திருவுருவைக் காணுகின்றோம். அவன் அருளில் திளைக்கிறோம். இவ்வாறு நாள்தோறும் கோயிலில் நடைபெறும் அமைப்பு முறைகள் நமக்கு ஒரு பெரிய தத்துவத்தை உணர்த்துகின்றது. இவ்வுலக வாழ்வில் இறைவனைக் காணா வண்ணம் மாயை என்ற திரையிடப்பெற்றிருக்கின்றது.

மும்மலங்கள் என்ற திரைகள் மறைத்துக் கொண்டிருக்கின்றன. ஞானவிளக்கு நமக்குக் கிடைத்துவிட்டால் மாயை, மும்மலங்கள்

என்ற திரைகள் தாமாகவே அகன்று விடுகின்றன. பின் பதியாகிய இறைவனைக் காணலாம். இவ்வாறு பாசங்களாகிய திரைகள் அகலப் பெற்றுப் பதியாகிய இறைவனைக் கண்டு அவன் திருவருளை ஞானிகள் பெறுகின்றனர். யோக நெறியில் இறைவனைச் சித்தத்தால் சிந்தித்து உணர்ந்து கண்டு சித்தம் தெளிந்த ஞானிகளைச் "சித்தர்கள்" என்றே தமிழ்ப் பெருமக்கள் அழைத்தனர்.

அனுபூதி ஞானம் பெற்ற இச்சித்தர்கள் தமிழகத்திலே பிறந்து வளர்ந்தவர்கள்; ஒருவனே தேவன் என்ற தெய்வ நெறிக் கொள்கையை உடையவர்கள்; இவ்வுலகிற்கு இறைவன் அடிப்படையானவன் என்பதை உணர்ந்தவர்கள்;

இவர்களில் சிலர் காயசித்தி பெற்றவர்கள்; சிலர் அட்டமாசித்தி பெற்றவர்கள்; இன்னும் சிலர் வைத்திய நூல்கள் தந்தவர்கள். இவர்களில் ஒருவரான சிவவாக்கியர் கூறும் தெய்வக் கருத்தைப் பார்ப்போம். இவ்வுலகில் மக்கள் பல தெய்வ வழிபாடு செய்கின்றார்கள்.

அரனே பெரிய தெய்வம் என்பார் ஒரு சிலர்; அரியே பெரிய தெய்வம் என்பார் வேறு சிலர், இவ்வாறு தாம் வழிபடும் தெய்வங்களின் பெயர்களைக் கூறிக் கொண்டு கருத்து வேறுபாடு கொண்டு அடித்துக் கொள்ளுகின்றனர்.

இவர்களை நோக்கிக் கூறுகின்றான். ''மாந்தர்களே! எங்கள் தெய்வம் உங்கள் தெய்வம் என்று கூறும் பூதத்தை நிறுத்துங்கள். தங்கம் ஒன்றுதான். அத்தங்கத்திலிருந்து பல்வேறு அணிகலன்கள் செய்வது போல் இவ்வுலகில் இறைவன் ஒருவன்தான். அவனே பல வடிவங்களைத் தாங்கி நம்முள் கலந்து நிற்கின்றான்.

இதனை அறியாது அரி, அரன் என்றெல்லாம் கூறுகிறீர்களே! அவ்வாறில்லை, ஒருவனாக நம் உள்ளத்துக்குள்ளே சிறந்து, எங்கும் ஆகி விளங்குகிறான் இறைவன்" அவனை அறியுங்கள்:-

*தங்கம்ஒன்று ரூபம்வேறு தன்மையான வேறுபோல்*
*செங்கண்மாலும் ஈசனும் சிறந்திருந்த எம்முளே*

*விங்களங்கள் பேசுவார், விளங்குகின்ற மாந்தரே!*

*எங்குமாகி நின்றநாமம் நாமமிந்த நாமமே?*

**– சிவவாக்கியர்; சித்தர் ஞானக்கோவை**

என்று கூறுகின்றார்.

மேலும், மெய்யொளியாய், எங்கும் நிறைந்த பேரொளியாய்த் திகழ்பவனை எங்குச் சென்று தேடுவது? அவரே கூறுகின்றார்.

இறைவனை வெளியே தேடி அலையவேண்டாம். வேறு எங்கும் வெளியில் அவனைக் காணமுடியாது. அப்பெருமானை உள்ளே தேடுங்கள். உள்ளத்திற்குள்ளேயே சிந்தியுங்கள். மற்ற பொருள்களின் மேல் பற்று வைக்காது அவன் மேல் பற்றாகி நில்லுங்கள். அவன் புகழ் கூறும் நூல்களை ஒரே சிந்தையோடு உணர்ந்து பாடுவதோடு ஐம்புலன்களின் செருக்கையும் அடக்கி ஆள்வீர்; இவ்வாறு செய்தால் உங்கள் ஆணவமலம் அழியப் பெறும். சோதி வடிவமாக உங்கள் உள்ளத்துக்குள்ளே தோன்றுவான் இறைவன். தோன்றிய அவன் அங்கே கோயில் கொண்டும் இருப்பான் என்கிறார்.

*உற்ற நூல்கள் உம்முளே*

*உணர்ந்து உணர்ந்தும் பாடுவீர்;*

*பற்றை அறுத்து நின்றுநீர்*

*பராப ரங்கள் எய்தலீர்;*

*செற்ற மாவை உள்ளரைச்*

*செருக்க றுத்தே இருத்திடில்*

*சுற்ற மாக உம்முளே*

*சோதி என்றும் வாழுமே!*

என்று சித்தராகிய சிவவாக்கியர் பாடுகின்றார்.

## பத்தி

பத்திநெறி, சித்தர்கள் நெறிகளுள் ஒன்றாகும். இவ்வுலகில் வாழ்கின்ற உயிரினங்கள் தங்கள் தங்கள் வசதிக்கேற்பத் தங்கள் வாழ்வு முறையை வகுத்துக் கொள்கின்றன. எறும்பு முதல் எல்லா உயிரினங்களும் அவ்வாறே அமைத்துக் கொள்ளப் பார்க்கின்றோம். மனிதன் தன்னுடைய அறிவின் துணையால் வாழ்க்கையை வகுத்துக் கொள்கின்றான். சமுதாயத்தையும் அமைத்துக் கொள்கின்றான்; சமுதாயம் .நிலைக்கச் சில சட்டதிட்டங்களை ஏற்படுத்திக் கொண்டு அதன் வழி வாழத்தலைப்படுகின்றான்.

இவ்வாறு அறிவின் துணையை நாடி வாழ்ந்தாலும், இயற்கையின் சூழ்நிலைகளால் பாதிக்கப்படுகின்றான். மேலும் தன்னுள்ளிருந்து வெளிப்படும் ஆசை, அழுக்காறு போன்ற குணங்கள் விளைவிக்கின்ற துன்பங்களினால் துன்புறுகிறான். அமைதியை இழக்கிறான். இவ்விதம் நிகழும் நிலைமைக்கு என்ன காரணம் என்று ஆராய்ந்தனர் நம் முன்னோர்கள். ஒரு முடிவுக்கு வந்தனர். மனிதனிடம் தோன்றும் அறிவை நம்புவதற்கில்லை; ஏனென்றால் அந்த அறிவு எப்பொழுதுமே பயனை நோக்கமாகக் கொண்டு சிந்திக்கின்றது. தனக்கு வேண்டிய வசதிகளைப் பெருக்கிக் கொள்ளும் கருவியாகவே அது மனிதனுக்குப் பயன்படுகின்றது. பிற உயிர்களைப் பற்றியோ, பிற மனிதர்களின் இன்ப துன்பங்களைப் பற்றியோ சிந்திப்பதில்லை. பிறர் பசியால் வ்ாடத் தானுண்டு வாழத் தலைப்படுகின்றது. தன்னலவாதியாகவே அது அவனை ஆக்குகின்றது. இவ்வாறு தன்னல அறிவை மாற்றிப் பொதுநல அறிவாக எவ்வாறு மாற்றுவது என்று எண்ணினார்கள். மனிதனிடம் பிறக்கும் குறை அறிவை நிறை அறிவாக, தூய அறிவாக மாற்ற முயன்றனர். அறிவு, தூய்மை பெறுவதற்கு அறிவுக் கருவியாக விளங்கும் எல்லாம் வல்ல இறைவனோடு ஒன்றச் செய்யும் பக்தி உணர்வு கலக்க வேண்டுமென்று கருதினர்.

அறிவும் பக்தியும் கலக்கும் பொழுது, அறிவு தூய்மையை அடைகின்றது. தூய்மை பெற்ற அறிவு தன்னலத்தை விட்டுப்

பொது நல அறிவாக மாறி விடுகின்றது. இந்த உண்மையைக் கண்ட ஞானிகள் பக்தியை வளர்க்கத் தலைப்பட்டனர். பத்தி செய்வது எவ்வாறு என்பதைச் சித்தராகிய பட்டினத்தார் கூறுகின்றார். இறைவன் திருவடியை நினைக்க வேண்டும்; உண்மை உள்ளத்தால் அந்தத் திருத்தாளைப் பக்தியுடன் சிந்திக்க வேண்டும்; அன்பு செய்யவேண்டும்; காதலாக வேண்ணும்; கண்ணீர் பெருக்க வேண்டும்; நினைந்து கசிந்து உளம் நெக்கு நெக்கு உருக வேண்டும்; அவன் நாமத்தை இடையறாது சொல்லித் துதிக்க வேண்டும்; அவ்வாறு செய்யும் தியானத்தால் ஆனந்தம் பெருகுகின்றது என்று உரைக்கின்றார்.

*நீறார்த்த மேனி உரோமம்*
*சிலிர்த்து உளம் நெக்குநெக்குச்*
*சேறாய்க் கசிந்து கசிந்தே*
*உருகி நின்சீரடிக்கே*
*மாறாத் தியானமுற்று ஆனந்த*
*மேற்கொண்டு மார்பில்கண்ணீர்*
*ஆறாய்ப் பெருகக் கிடப்பதென்றோ?*
*கயிலா யத்தானே!*

**– பட்டினத்தார்; சித்தர் ஞானக்கோவை**

என்று கயிலாயத்தானை பக்தி செய்ய வேண்டுமெனக் கூறுகின்றார்.

இவ்வாறு பத்தி செய்யும்பொழுது சிலவகைச் சோதனைகள் நம்மை நோக்கி வரும். கடலிலே அகப்பட்ட துரும்பு போலத் துன்பத்தால் அலைக்கும்; ஆலையில் கொடுக்கப்பட்ட கரும்பு போலப் பிழியும்; வலையில் அகப்பட்டுத் தவிக்கும் மானைப் போல நம்மை மயங்க வைக்கும்; அலைத்தும், பிழிந்தும், மயக்கிக் கொடுமைப் படுத்தினாலும். நாம் மெய்ப் பொருளாகிய இறைவனை மட்டும் மறக்கவே கூடாது. அவன் நினைவாகவே இருந்து பத்தி செய்ய வேண்டும். துன்பம் படுத்தும் அவனை எண்ணி மெழுகுபோல் உருகி அன்பு செய்ய

வேண்டும். அப்பொழுது அவன் வெளிப்படுவான் காணலாம் என்று சொல்லுகின்றார் சித்தராகிய கணபதிதாசர்:-

*அலைதனில் துரும்பு போலும்*
*ஆலைவாய்க் கரும்பு போலும்*
*வலைதனில் மானைப் போலும்*
*மயங்கிநைந் தலைந்தாய் நீதான்*
*உலைதனில் மெழுகைப் போலும்*
*உருகிமெய்ப் பொருளை உன்னி*
*நிலைதனின் நின்று நாகை*
*லிங்கரைக் காண்பாய் நெஞ்சே!*

என்று நெஞ்சுக்கு வழிகாட்டுகின்றார் சித்தர்

**– கணபதி தாசர்; சித்தர் பாடல்கள்**

"கடவுளைப் பகுத்தறிவைக் கொண்டு காண முடியாது! பக்தியினால் தான் காணமுடியும், கண்ட பின்னும்கூட பக்தியைக் கொண்டுதான் காட்சியை நிறுத்திக் கொள்ள முடியும். நாம் அடையக் கூடும் மேன்மையை இறைவனிடத்து கொண்ட உண்மை பக்தியைக் கொண்டே அடைய முடியும்"

**– அரிசன் 13-6-1936)**

என்று காந்தியடிகள் கூறுவதை ஒப்புநோக்கலாம்.

## அன்பு

"ஆண்டவன் நமக்குள் மறைந்து நிற்கின்றான். நம்முடைய ஊனுக்குள், உயிருக்குள் அந்தரங்கமாக விளங்குகின்றான். நமக்குள் இருக்கும் ஆண்டவனைக் காண்பதற்குப் பல துறைகள் உண்டு. அவற்றில் அஹிம்சை ஒரு துறை.

ஆண்டவனை எல்லா உயிருள்ளும் கண்டு, எல்லா உயிரும் பகவான் உருவமே என்பதை உணரவேண்டும். அதுவே அஹிம்சையாகும். அந்த உணர்வை, உயிர் உணர்ச்சிகளில் நாம்

'அன்பு' என்கின்றோம். உயிர்களை ஒன்றாகப் பிணைத்துக் கட்டும் சக்தி அன்பாகும். அதுவே உயிர்களைக் கடவுளுடன் பிணைக்கின்றது" (1-6-42) -என்று கூறுகின்றார் காந்தியடிகள்

உண்மையில் மனித வாழ்க்கையில் தோன்றுகின்ற உணர்ச்சிகளுக்கெல்லாம் தலைசிறந்து நிற்கும் உணர்ச்சி அன்பு உணர்ச்சியாகும். விலங்கினம் முதல் மனித இனம் வரை எல்லா இனங்களும் அன்பு உணர்வோடு வாழக் காண்கின்றோம்.

அன்பானது உள்ளத்தைப் பண்படுத்துகின்றது; ஒற்றுமையை வளர்க்கின்றது; வாழ்வை உயர்த்துகின்றது; இதனால் தான் திருவள்ளுவர் ''அன்பின் வழியது உயிர் நிலை'' எனக் கூறினார் போலும்! இவ்வாறு வளர்ச்சியடைந்த அன்பு பாசக் கலப்புள்ளது. வாழ்வு நிலையில் நின்றுதான் அதனால் செயல் ஆற்ற முடியும். அருள் நிலைக்குச் செல்ல முடியாது. அருள் நிலைக்குச் செல்வற்கு அவ்வன்பை இறைவன்பால் செலுத்த வேண்டும்.இறைவனைப் பற்றிப் படர்ந்து வளரும் அன்பு முதிர்கின்றது; முழுமையை அடைகின்றது. பாசம் அகன்ற தூய அன்பாக மாறுகின்றது. அத்தகைய அன்பில் இறைவன் அருள் அமைகின்றது எனக் கூறுகின்றார் திருமூலர். 'அன்பே சிவம்' என்பது அவர் திருவாக்கு! மேலும், அந்த அன்பு உருகிக் குழையும்பொழுது, தெய்வ தரிசனம் கிட்டுகின்றது என்றும் கூறுகின்றார். "அன்போடு உருகி அகங்குழை வார்க்கன்றி, என் பொன் மணியினை எய்த வொண்ணாதே!" எனவும் பகர்வர். இந்தக் கருத்தினையே,

*தாயினும் அன்பன் அன்றோ-பசுவே!*

*சக்திக் குள்ளானவள் தான்?*

*நேயம் உடையவர் பால்-பசுவே*

*நீங்காது இருப்பானே!*

என்று வலியுறுத்துகின்றார் சித்தராகிய இடைக்காடர்.

இத்தகைய தூய அன்பு மேலும் பெருக வேண்டும். அக்காலை நீரிற் குமிழியாகிய வாழ்க்கை இன்பம் விளங்குகின்றது. புலன்களின் ஒடுக்கம் வளர்கின்றது. கருணை பிறக்கின்றது.

காணுகின்ற உயிர்கள் எல்லாம் இறைமயமாகத் தோன்றுகின்றன. அனுபூதி நிலையை அடைகின்றது. அப்பொழுது சிவானந்தத் தேன் பொழிகின்றது. இத்தகைய நிலையை நான் அடைவது எக்காலம் என்று கேள்வி கேட்பதின் மூலம் அந்த வழி முறையும், அதன் பயனையும் தெள்ளத்தெளியப் பாடுகின்றார் சித்தர்.

*கண்ணால் அருவி கசிந்துமுத்துப் போலுதிர*
*எண்ணாப் பரம்பொருளை எண்ணுவது எக்காலம்?*
*ஆகம் மிகவுருக, அன்புருக, என்புருகப்*
*போக அனுபூதி பொருந்துவதும் எக்காலம்?*
*நீரிற் குமிழிபோல் நிலையற்ற வாழ்வைவிட்டுன்*
*பேரின்பக் கருணைவெள்ளம் பெருக்கெடுப்ப தெக்காலம்?*
*அன்பை உருக்கி அறிவை அதன் மேற்புகட்டித்*
*துன்பவலைப் பாசத் தொடக்கறுப்ப தெக்கலாம்?*
*கருவின் வழியறிந்து கருத்தைச் செலுத்தாமல்*
*அருவி விழிசொரிய அன்புவைப்ப தெக்காலம்?*
*தெளியத் தெளியத் தெளிந்தசிவா னந்தத்தேன்*
*பொழியப் பொழிய மனம் பூண்டிருப்ப தெக்காலம்?*

**– பத்திரகிரியார்; மெய்ஞ்ஞானப்புலம்பல்**

என்று சித்தராகிய பத்திரகிரியார் பாடுகின்றார். இத்தகைய அன்பு நெறியே சித்தர் நெறிகளுள் ஒன்றாகும்.

## அறஉணர்வும், பற்றற்ற தன்மையும்

சித்தர்கள் தம் வாழ்க்கைக்கு வேண்டிய அறநெறிகள் பலவற்றைத் தந்துள்ளார்கள். 'தருமம் தலைகாக்கும்' - என்பது நம் நாட்டுப் பழமொழியாகும். மனிதனாக வாழ்பவன் தம் வாழ்நாளில் அறம் செய்ய வேண்டும். அறமானது வாழ்கின்ற உயிர்களுக்குச் சிறப்பை அளிக்கும்; புகழைக்

கொடுக்கும்; நன்மையையும் இன்பத்தையும் நாளும் நல்கும்; துன்பம் தொடருங்காலத்து கவசம் போன்று பாதுகாக்கும்; இறையருளைக் கூட்டுவிக்கும்; இத்தகைய சிறப்புத் தரும் அறத்தை ஏற்று அதன்படி ஒழுக வேண்டும். அவ்வாறு ஒழுகும் பொழுது அது நடைபெற விடாமல் வாழ்க்கையில் சில குறுக்கீடுகள் வந்து தடைப்படுத்தும். முதலாவது அலையும் மனம் ஒருவகைத்தடை; அடுத்து பேராசை ஒருவிதத் தடை; காமம் எழுந்து அது வேறு வகைத் தடையாக முன் நிற்கும். இத்தகைய தடைகளைக் கடந்து விட்டால் அறத்தின் சிறப்பை நாம் அனுபவிக்கலாம். இத்தடைகளைக் கடப்பதற்கு, இறையருளை இடையறாது சிந்திக்க வேண்டும் என்று கூறுகின்றார் சித்தர். இறையருளால் இவற்றை எல்லாம் கடப்பது எக்காலம் என்ற வினா மூலம் அறிவுறுக்கின்றார்.

*காமக் கடல்கடந்து கரையேறிப் போவதற்கே*
*ஓமக் கனல்வளர்த்தி யுள்ளிருப்ப தெக்காலம்?*
*பாசத்தை நீக்கிப் பசுவைப் பதியில்விட்டு*
*நேசத்தின் உள்ளே நினைந்திருப்ப தெக்காலம்?*
*ஊனாகி ஊனில் உயிராகி எவ்வுலகுந்*
*தானாகி நின்ற தனைஅறிவ தெக்காலம்?*
*கடலில் ஒளித்திருந்த கனலெழுந்து வந்தாற்போல்*
*உடலில் ஒளித்தசிவம் ஒளிசெய்வ தெக்காலம்?*
*காட்டும் அருள்ஞானக் கடலில் அன்புக் கப்பல்விட்டு*
*மூட்டுகரு ணைக்கடலில் மூழ்குவது எக்காலம்?*

**– பத்திரகிரியார்; மெய்ஞ்ஞானப் புலம்பல்**

என்று வினா மூலமாகக் கூறுகின்றார் சித்தராகிய பத்திரகிரியார். அடுத்து சித்தர் மத, சாதி வேற்றுமைகளை வெறுக்கின்றார். உலகில் சமயப் பிரசாரத்தில் தலைமைப் பீடத்திலிருக்கும் ஒரு சாரார் தெய்வங்களில் பெயர்களைச் சொல்லித் தங்கள் சமயத்தை வளர்க்கின்றனர். மற்றொரு சாரர்

அவர்கள் தெய்வப்பெயரைச் சொல்லி ஆதரவு தேடுகின்றனர். இரு சாரர்களும் அடித்துக் கொள்ளக் காண்கின்றோம். இவர்களிடையே சமய பேதம் தலைதூக்கத் தெய்வ சிந்தனை போய் விடுகின்றது. இன்னும் மக்கள் சாதிகளின் பெயராலும் நிகழ்கின்ற கொடுமைகளைப் பார்க்கின்றோம். இந்த நிலைகளை நன்குணர்ந்து இதனை விட்டொழியுங்கள் எனக் கூறுகின்றார் பாம்பாட்டிச் சித்தர்

*சமயபேதம் பலவான சாதி பேதங்கள்*

*சகத்தோர்க்கே அல்லாது சாதுக் களுக்கோ*

*சிமயத்தில் ஏறினபேர் சித்தம் மாறுமோ*

*சித்தர்சித் தாந்தம் தேர்ந்தாடு பாம்பே!*

என்று கூறுகின்றார்.

**– பாம்பாட்டிச் சித்தர்; சித்தர் ஞானக் கோவை**

மேலும் நிலையாமையை மிக நன்றாக அறிவுறுத்துகின்றார்கள் சித்தர்கள். நாம் வாழ்க்கையில் காணுகின்ற பொருள்கள் அழியக் கூடியன. கால ஓட்டத்தில் அவை நிலைப்பதில்லை. பெரும் செல்வம் சேர்ப்பார் ஒருவர், காலநிலை மாறும்பொழுது செல்வம் அவரை விட்டுப் போய்விடுகின்றது. முன்பிருந்த நிலைமாறி ஏழ்மையை அடைந்து விடுகின்றார். இவ்வாறு சமுதாயத்தில் எல்லாத் துறைகளிலும் கீழ் மேலாவதும், மேல் கீழாவதும் காண்கின்றோம். கண் முன்னால் நிலையானது என எண்ணுவது நிலையற்றதொன்றாகி விடுகின்றது. அத்தனையும் வெளிமயக்கமாகும். நிலையற்ற பொருள்களின் மேல் பற்று வைப்பதைக் காட்டிலும் நிலையான கச்சியம்பதியில் வாழும் இறைவனாகிய பரம்பொருளின் பால் பற்று வையுங்கள் என்று அறிவுரை கூறுகின்றார் சித்தராகிய பட்டினத்தார்.

*நல்லார் இணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே*

*அல்லாது வேறு நிலையுளதோ? அகமும் பொருளும்*

*இல்லாளும் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழில் உடம்பும்*

*எல்லாம் வெளிமயக் கேஇறைவா! கச்சி ஏகம்பனே?*

**– பட்டினத்தார்; சித்தர் ஞானக்கோவை**

என்பார்.

அடுத்து, சித்தராகிய திருமூலர், வாழ்க்கையில் நாம் செய்ய வேண்டிய கடமைகள் சிலவற்றைக் கூறுகின்றார்.

மக்களே! இவ்வுலகில் சாதி வேற்றுமைகளை விட்டொழியுங்கள். இன்னார் இனியர் என்று பாராது உங்களைத் தேடி வருபவர் யாராயிருப்பினும் சோறிடுங்கள். அவர்கள் பசிப் பிணி தீர்த்து விடுங்கள். நீங்கள் உண்ணும்பொழுது மெதுவாக உண்ணுங்கள். பழமையான உணவை உண்ணுவதைத் தவிர்த்து விடுங்கள்; கரைந்து வரும் காக்கைக்குச் சோறிடுங்கள் என்று உணவளிக்கும் சிறப்பைத் தொகுத்துக் கூறுகின்றார்.

*ஆர்க்கும் இடுமின்னவர் இவர் என்னன்மின்;*
*பார்த்திருந் துண்மின்; பழம்பொருள் போற்றன்மின்;*
*வேட்கை யுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்;*
*காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே!"*

**– திருமூலர், திருமந்திரம்**

என்று அறிவுரை பகர்கின்றார்.

இத்தகைய அறநெறிகள் ஒளி வீசும் வைரப் பேழைகளாகும்.

## அடைக்கலம்

சித்தர்கள் அடைக்கல நெறியை பெரிதும் வலியுறுத்திச் சொல்லுகின்றார்கள். அதற்குரிய வழியையும் நமக்கு வகுத்துக் காட்டுகின்றார்கள். பொதுவாக நாம் வாழ்க்கையில் காணலாம். வலிமைவாய்ந்த ஒருவரிடம் வலிமையற்ற ஒருவர் போய் எல்லாம் நீங்கள் தான் உதவி செய்யவேண்டும் என்று சொன்னால் அப்புகழ்ச்சிக்கு அவரும் ஆட்பட்டு உதவி செய்யக் காண்கின்றோம். இது மனித நிலையில் நிகழ்வது. இது போல எல்லாவற்றிலும் ஆதாரமாகவும் வலிமை வாய்ந்தவனுமாக இருக்கும் இறைவனிடம் செல்லுங்கள் என்று கூறுகின்றார் சித்தர். உண்மையிலே எல்லாம் வல்ல இறைவன் வலிமையைப் பற்றி நம்மாழ்வார் சொல்லுகின்றார் இறைவன் பேரருளாளன். அவன் காற்றாகி, நெருப்பாகி, நீராகி, நிலமாகி, வானாகிக்

காட்சி தருகின்றான். இவ்வாறு வலிமை வாய்ந்த ஐம்பூதமாய் நின்று இந்த உலகை ஆள்கின்றான் அதுமட்டுமா? அந்த ஐம்பூதப் பொருள்களின் உள்ளேயும் ஈசன் மறைந்து நின்று இவ்வுலகை, உலக உயிர்களை இயக்குகின்றான். இவைகளை இயக்காமலும் தன்னுள் அடக்கிக்கொண்டு அமைதியாகவும் இருக்கின்றான். இத்தகைய அளவிடற்கரிய ஆற்றல் வாய்ந்த, வலிமை வாய்ந்த ஈசனைத்தான் வேதங்கள் பேசுகின்றன என்று திருமாலின் ஆற்றலை அழகாகப் பாடுகின்றார் நம்மாழ்வார்.

*திடவிசும்பு, எரி, வளி, நீர், நிலம் அவை மிசைப்*

*படர்பொருள் முழுவதும் ஆய், அவை தொறும்*

*உடல் மிசை உயிர் எனச் சுரந்து எங்கும் பரந்துளன்*

*சுடர் மிகு சுருதியுள் இவை உண்ட சுரனே!*

என்பது பாசுரம். இவ்வாறு ஆற்றல் வாய்ந்த ஈசனிடம் அன்பு வைக்கவேண்டும். அவன் திருத்தாள்களே சரணம் என்று அவனிடம் சரணடையவேண்டும். உள்ளத்தில் எவ்விதமான ஐயப்பாடுமின்றி நீயே கதி என்று நாம் அவனைச் சரணடைவதை சரணாகதி தத்துவம் என வைணவர்கள் சொல்வார்கள். அத்தகைய சரணாகதியை இறைவன் ஏற்று நம்மைக் காத்தருள் புரிகின்றான். இத்தகைய சரணாகதியை நம்மாழ்வார்.

*"ஒடுங்க அவன்கண்*

*ஒடுங்கலும் எல்லாம் விடும்"*

என்று தத்துவமாகப் பாடுகின்றார் நம்மாழ்வார். இந்த சரணாகதியாகிய அடைக்கல நெறியே சைவ நாயன்மார்களுடைய நெறியாகும். எல்லாம் வல்ல இறைவனை நோக்கி மாணிக்கவாசகர் பாடுகின்றார்.

முழுமுதற் பெருமானே! உன்னுடைய அருள் பெற்ற அடியார்கள் உன் திருவடியை அடைந்து அழியாத பேரின்பத்தைப் பெற்றார்கள். ஆனால் நானோ உன்னை வழிபடுகின்ற நெறியினை அறியமாட்டாதவனாக இருக்கின்றேன். நெறியறியாவிட்டாலும், உன்னையே எண்ணி எண்ணி உருகும் முறையினையும் அறியேன். ஆகவே உன்னை நான் எவ்வாறு அடைவது? ஒன்றும் அறியாத என்னை உன் அடைக்கலப் பொருளாக ஏற்றுக் காத்தருள் புரிவாயாக என வேண்டுகின்றார்.

*பிறிவறி யாஅன்பர் நின்னருட்*
*பெய்கழல் தாளிணைக்கீழ்*
*மறிவறி யாச் செல்வம் வந்தபெற்*
*றாருன்னை வந்திப்பதோர்*
*நெறியறி யேன்நின்னை யேஅறி*
*யேன்நின்னை யேஅறியும்*
*அறிவறி யேன் உடையாய் அடி*
*யேன் உன் அடைக்கலமே!*

**– மாணிக்கவாசகர், திருவாசகம்**

என "அடைக்கலப்பத்து" -என்ற தலைப்பில் பாடி வேண்டுகின்றார்.

இந்த நெறியை இன்னும் அழகாகக் காட்டுகின்றார் பட்டினத்தார்.

அம்பலத்தரசே! அடைக்கலம் என்று உன்பால் வந்த எளியார்க்காக மிக எளிமையாக இறங்கி வந்து ஏற்றுக்கொள்கின்றாய். அவர்கள் குறைகளை நீக்கி இறைவியோடு காட்சி தந்து அருள் புரிகின்றாய்! உன் கருணைக்கு அடைக்கலம் என்று வாயாரப் பாடுகின்றார்.

*இமையா நாட்டத் திறையே அடைக்கலம்!*
*அடியார்க்கு எளியாய் அடைக்கலம்! அடைக்கலம்!*
*கருணைகொண் டலையெறி கடலே! அடைக்கலம்!*
*தேவரும் முனிவரும் சென்று நின் றேத்தப்*
*பாசிழைக் கொடியோடு பரிந்தருள் புரியும்*
*எம் பெரு மானின் இணையடிக் கபயம்!*
*அம்பலத்து அரசே! அடைக்கலம் உனக்கே!*

**– பட்டினத்தார்; சித்தர் ஞானக்கோவை**

என்று பாடி, அழியாத நிலை பெற்ற அவன் திருவடியில் அடைக்கலமாகச் செல்லும் நெறியினைச் சித்தரிக்கின்றார் சித்தர்.

## ஞானம்

சித்தர்கள் ஞானம் பெற்றவர்கள்; அவர்கள் வாசி என்ற மூச்சினை அடக்குபவர்கள்; உணவைக் குறைத்து உடல் இயக்கத்தைக் குறைத்தவர்கள்; யோக சித்தியால் மனத்தை ஒருமுகப்படுத்தி, குண்டலி சக்தியை எழுப்பும், ஆற்றல் வாய்ந்தவர்கள்; ஐம்புலன்களையும் தன் வசத்தில் வைத்திருப்பவர்கள். அவர்கள் ஞான நெறியினைப் பற்றி அருமையாகக் கூறுகின்றார்கள்.

மனம் பொல்லாதது; அது குரங்கினைப் பொன்றது. ஆசைவாய்ப்பட்டுக் கண்ட இன்பங்களை நாடித் தாவும்; தீயவை எனத் தெரிந்தாலும் அதன் சுவையில் மயங்கி அதனை விடாப்பிடியாக பிடித்துக் கொள்ளும். இவ்வாறு செல்லும் மனத்தை அதன் வழி செல்லாது அடக்க வேண்டும். ஐம்புலன்களையும் தன் வசப்படுத்த முயலவேண்டும். இதற்கெல்லாம் புற்றுக் கோடாக இறைவனை எண்ணி அவன்பால் அன்பு செய்ய வேண்டும்; அந்த அன்பு பக்தியில் கண்ணீர் பெருக்க வேண்டும். அதற்கு மேலாக அறவழி நின்று அவனையே ஒருமுகப்படுத்தினால் ஞானம் பிறக்கின்றது. எல்லாம் இறைமயம் எனத் தெளிந்த நிலையில் இறையருள் பிறக்கின்றது. அந்த நிலையில் அவன் ஞானி ஆகின்றான்.

“புலன்களை எல்லாம் அடக்கி என்னையே கருத்தில் கொண்டு மனத்தை நிலை நிறுத்த வேண்டும். புலன்கள் எவனுடைய வசத்தில் உள்ளனவோ அவனுடைய ஞானம் நிலைபெற்றதாகும்” என்பார் கீதையில் கண்ணபிரான்.

உலகத்தில் ஒருவன் அறிவு பெற்றவனாக இருக்கலாம்; அல்லது சுத்த வீரனாக இருக்கலாம்; ஆனால் இவர்கள் மனத்தோடு போராடும்பொழுது தோற்று விடுகின்றார்கள். மன உணர்ச்சிகள் அவர்களை நுட்பமாக ஏமாற்றி விடுகின்றன.

காரணம் மனத்தை வசப் படுத்தும் பயிற்சியில்லை. அதற்கு மேலாக அதனை இறைவன்பால் திருப்பும் வலிமை இல்லை. ஆகவே தோல்வி அடைகின்றனர். தெய்வத்தினிடத்துத் திருப்பிய ஞானியோ வெற்றி பெற்று நிலையானவராக ஆகிவிடுகின்றார். இந்தக் கருத்தை;-

*வாறான உலகத்தில் சுத்த வீரன்*

*மனத்தோடே போராடி அறிவில் மாள்வான்*

*கூறான ஞானி யென்றால் லிங்கம்புக்குக்*

*குறியான அம்பலத்தில் சேர்வா னப்பா!*

**– சட்டை முனி; சித்தர் ஞானக்கோவை**

அடுத்து, இராமலிங்க அடிகள் இறைவனை நோக்கிக் கூறுகின்றார்.

சிவகாம வல்லி மணவாளா! நான் என்ன பாவம் செய்தேன். என் மனக்குரங்கு போடும் ஆட்டத்தைப் பார்க்க முடியவில்லை. பிறகு ஒருவாறு உன் அருளால் அடக்கி விட்டேன். இவ்வுலக இன்பம், பற்று எல்லாவற்றையும் துறந்து விட்டேன்; என் உயிர் உடல், பொருள் எல்லாவற்றையும் உனக்குக் காணிக்கையாக ஆக்கிவிட்டேன். இனி என்பால் ஒன்றும் இல்லை; உன்னைக் காணவேண்டும் என்று ஆசைமயமாகி நிற்கின்றேன். உன் குறிப்பை நான் அறியேன். சரியான தருணம் வந்துவிட்டது உன் ஞானமுதை வழங்குவாயாக என்று வேண்டுகின்றார்.

பாவிமனக் குரங்காட்டம் பார்க்கமுடி யாதே

பதி வெறுத்தேன் நிதிவெறுத்தேன் பற்றனைத்தும் தவிர்த்தேன்

ஆவியுடல் பொருளையுன்பாற் கொடுத்தேன் உன் அருட்பேர்

*ஆசைமய மாகி உனை அடுத்துமுயல் கின்றேன்*

*கூவியெனை ஆட்கொள்நீ நினையாயோ நினது*

*குறிப்பறியேன் பற்பலகால் கூவியிளைக் கின்றேன்*

*தேவி சிவ காமவல்லி மகிழுமண வாளா*

*தெருள்நிறைவான் அமுதளிக்குந் தருணமிதுதானே!*

**- இராமலிங்க அடிகளார், திரு அருட்பா**

என்று வேண்டுகின்றார்.

இப்பாடலில் படிப்படியாக மனத்தை இறைவன்பால் திருப்பும் முறையாக மிக நன்றாக அறிவுறுத்துகின்றார் சித்தர். மன ஆட்டத்தை ஒடுக்கி ஆணவத்தைக் களைந்து இன்பங்களை வென்று பற்றுக்களை விட்டு, அதன் பின் இறைவாழ்வு ஒளியைக் காணுகின்றார் சித்தர்.

இத்தகைய ஞான நிலையைப் பெற்றுவிட்டால் இவ்வுலகில் நாம் எத்தகைய செயலைச் செய்ய நினைத்தாலும் எத்கைய எண்ணங்களைச் செயலாக்க முனைந்தாலும் அவை எல்லாம் இறைச் செயலே எல்லால் நம் செயல் அல்ல என்பதை உணரலாம் என்று கூறுகின்றார் சித்தர். இந்த ஞான தத்துவத்தை,

*ஏதேது செய்தாலும்*

*ஏதேது சொன்னாலும்*

*ஏதேது சிந்தித்*

*திருந்தாலும் -மாதேவா!*

*நின்செயலே என்று*

*நினதருளாலே உணரில்*

*என்செயலே காண்கிலே னே!*

**- சிவபோக சாரம், சித்தர் ஞானக்கோவை**

என்று கூறுகின்றார் சித்தர்

இத்தகைய ஞானத்தைப் பெற்றவர்கள் அனுபூதிமான்கள். பாசத்தை வென்று பதியை உணர்ந்த ஞானிகள் சிறந்த ஞானிகளாகிய சித்தர் நெறிகள் வாழ்க!

# தமிழகத்தின் திருக்கோயில்கள்

(பண்பாட்டுச் சின்னங்கள்)

உலகில், ஒரு சமுதாயமாகப் பிறந்த மக்கள், தாங்கள் அமைத்துக் கொண்ட வாழ்க்கையை மிகச் சிறந்த முறையில் அறவழியில் நடத்திக் காட்டும் முறையைப் 'பண்பாடு'-என அறிஞர்கள் கூறுவர். விலங்கு நிலையிலிருந்து பிரிந்த மனித இனம் படிப்படியாக வளர்ந்து: வாழ்க்கையில் பல்வேறு இன்ப துன்பங்களை அனுபவித்தது; அவ்வனுபவ முதிர்ச்சி அவர்கள் அறிவையும், உள்ளத்தையும் ஒழுங்குபடுத்தியது. அற வாழ்வை அமைத்துக் கொடுத்தது. இவ்வாறு வாழ்க்கையில் அனுபவம் ஆக்கித் தந்த வாழ்வின் இயல்புகளே பண்பாடுகளாக மலர்ந்தன.

உலகில் இப்பண்பாடுகளைச் சமுதாயங்கள் தங்கள் மூதாதையரிடமிருந்து பெற்று வளர்த்தன. அவற்றுள் மிகச் சிறந்த, போற்றத்-தக்க பண்பாட்டினைப் பெற்ற இனம்; ஐயாயிரம் ஆண்டு வரலாறு பெற்ற தமிழ்ப் பெரும் இனமாகும். தமிழர்கள்

பழங்குடி இனத்தவர்கள்; அவர்களுடைய பண்பாடு தனித் தன்மைகளை உடையன; அவர்கள் உலக ஒற்றுமைப்பாட்டை உணர்ந்தவர்கள்; அன்பின் அரிய ஆற்றலை அறிந்தவர்கள்; உலக முழுவதையும் ஒரு குடும்பமாகப் பிணைக்கும் மன நலம் பெற்றவர்கள்;

"யாதும் ஊரே யாவரும் கேளீர்" - என்ற பொருள் மொழியை உரைத்தவர்கள்; அதனால் நன்மை பயக்கும் நல்வழியில் 'பிறர்க்கென வாழும்' பண்பை உருவாக்கித் தந்தவர்கள்; இவ்வுலகை இறைமயமாகக் கண்டவர்கள்; தெய்வம் ஒன்று என உரைத்தவர்கள்; மறை நூல்களாகத் தேவாரத்தையும், நாலாயிரத்தையும் போற்றிப் பரவி வந்தவர்கள்; மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என உணர்ந்து சமுதாயம் வாழப் பணிபுரிந்தவர்கள்; கதிரவன் கதிரைப் போன்று எல்லோரையும் சமமாகப் பேணி உதவும் நெறியில் ஒப்புரவாளர்களாக வாழ வழி காட்டியவர்கள். இவ்வாறு தங்கள் வாழ்க்கையில் உருவான இப்பண்புச் செல்வங்கள் காலம் காலமாக நிலைப்பதற்கு வழியைச் சிந்தித்தனர்;

வாழ்க்கையில் சிதறிப் போகாவண்ணம் காக்க முற்பட்டனர். ஆகவே அழியாது, நிலைபேறு கொண்ட இறைவனுக்கு கோயில் எடுத்து அத்திருக்கோயில் வழிமுறையோடு நற்பண்புகளைப் பிணைத்துக் காத்த வரலாற்றைப் பார்ப்போமாக!

## கோயில் அமைப்பும் வழிபாடும்

தமிழ்ப் பெருமக்கள் இறைவன் ஒருவன் என்று உணர்ந்தனர்; ஆனால் அவ்விறைவனுக்குப் பல்வேறு இடங்களில் பல்வேறு திருநாமங்களைச் சூட்டி வழிபடும் முறைகளையும் வகுத்தனர். தமிழ் நிலத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என ஐந்திணைகளாக வகுத்தனர். மலையும் மலைசார்ந்த இடமாகிய குறிஞ்சிக்குத் தெய்வம் முருகன் என்றும், காடும் காடுசார்ந்த இடமாகிய முல்லைக்குத் தெய்வம் திருமால் என்றும், வயலும் வயல் சார்ந்த இடமாகிய மருதத்திற்குத் தெய்வம் இந்திரன் என்றும், கடலும் கடல் சார்ந்த இடமாகிய நெய்தலுக்குத் தெய்வம் வருணன் என்றும், திணைகள் திரிந்து மணற் பரப்பான பாலைக்குத் தெய்வம் கொற்றவை என்றும் கொண்டனர்.

இவ்வாறு திணைகளைப் பிரித்துத் தெய்வ வழிபாடு செய்த தமிழ்ச் சமுதாயம் ஆதியில் இயற்கையின் சூழ்நிலையில் தெய்வ உருவங்களை அமைத்து வழிபடத் தொடங்கியது. மரத்தின் அடியிலும், எழில் சூழ்ந்த ஆற்றங்கரைகளிலும், மலர்ச் சோலைகளிலும், மலைக்குகைகளிலும் கடற்கரைகளிலும் ,ஏரி, பொய்கை, மலையருவி வீழும் இடங்களிலும் மற்றும் ஊற்றுநீர் நிலைகள் சூழ்ந்த இடங்களிலும் தெய்வப் படிமங்களை அமைத்துப் போற்றினர். மலையைக் குடைந்து குகைக் கோயில்களைக் கண்டனர். காலம் வளர்ந்தது; பின்னர் அத்தெய்வத் திருவுருவங்களுக்குச் சிறு கோயில்கள் எடுக்க முயன்றனர். இயற்கையில் கிடைத்த முல்லை, பிரம்பு போன்ற கொடிவகைகளைக் கொண்டு கூடம் அமைத்தனர்; அதன்பின் மரக் கிளைகளைப்பரப்பி, புல் கீற்று முதலியவைகளை அடுக்கிக் கூடம் கண்டனர்; அதன் பின் செங்கற்களோடு சுதைவேலைப் பாடமைந்த சிறு கோயிலை அமைத்தனர்.

பின்னர்க் காலப் போக்கில் கோபுரங்களோடு கூடிய மதில் சுவர்களைக் கொண்ட கற்கோயில்களை மிகப் பெரிய அளவில் அமைத்து வழிபடலாயினர். இவ்வாறு அமைந்த பல்வேறு கோயில் அமைப்புக்களைத் தேவாரத்தில் நம் அப்பர் பெருமான் தாம் பாடிய அடைவுத் திருத்தாண்டகத்தில்-

*"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்*
*பெருங்கோயில் எழுபதினோ டெட்டும் மற்றும்*
*கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழல் கோயில்*
*கருப்பறியப் பொருப்பனைய கொகுடிக் கோயில்*
*இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்*
*இளங்கோயில் மணிக்கோயில் ஆலக் கோயில்*
*திருக்கோயில் சிவனுறையும் கோயில் சூழ்ந்து*
*தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரு மன்றே"*

**– திருநாவுக்கரசர், திருமுறை 6 (பொது)**

எனத் தொகுத்துக் கூறியமை அறியலாம்.

இவ்வாறு மனம் ஒரு நிலைப்பட்டு வணங்குவதற்கு இயற்கையோடு இயைந்த திருக்கோயில்களை அமைத்தனர் தமிழர்கள். மேலும், இத்திருக்கோயில்களை - கோட்டம், நகரம், வளநகர், ஆலயம், மடம், ஈச்சரம், பள்ளி, சத்தி முற்றம், விண்ணகரம், முதலிய பெயர்களால் அமைத்துப் போற்றினர்.

தமிழ் நாட்டிற்கே உரிய ஆகம விதிப்படி கோயில் அமைப்பை, சுற்றுக்மதில், பெரிய கோபுரம், வாயில் பலிபீடம், கொடிக்கம்பம், கருப்பக்கிரகம், சுற்றுத் தெய்வங்களுக்குக் கூடங்கள். முதலியவற்றை வகுத்து முறைப்படுத்தினர். நாம் உடலை வளர்ப்பதைப் போன்று தெய்வத்திற்குப் பால், தயிர், நெய், தேன், இளநீர், பஞ்சாமிர்தம், எண்ணெய் முதலிய பொருள்களால் முழுக்காட்டி, மலர்சாத்தி, தேங்காய் உடைத்து, நல்லுணவு படைத்து, ஒளிகாட்டி வணங்கினர். பின் அவ்வுணவினையும், பாலையும் வழங்கி அறம் புரிந்தனர்; கோயில் முழுவதும் திருவிளக்கு ஏற்றுவதும். இறைவனுக்கு ஒளிகாட்டி ஆராதனை செய்வதும், உணவு அளித்தலும் மிகச் சிறந்த பண்பாட்டு முறைகளாகும்.

இத் திருவிளக்குத் தத்துவத்தை மிக அழகாக அப்பர் பெருமான் கூறுவார். மக்கள் திருவிளக்கு அகலில் நெய்யை ஊற்றித் திரியை திரித்து அதில் இட்டுச் சுடரை ஏற்றுவார்கள். அச்சுடர் ஒளியில் இறை உருவைக் கண்டு இன்புறுவார்கள். அதுபோன்று, நம் உடம்பு கோயிலாகும்; உள்ளம் திருவிளக்கு அகலாகும்; அவ்வகலில் அன்பு என்னும் உணர்வாகிய நெய்யை ஊற்றி, உயிராகிய திரியில் ஞானச்சுடரை ஏற்றுவோமேயானால், நம் உள்ளத்தே வீற்றிருக்கும் இறைவனைக் கண்டு இன்புறலாம்; அவன் திருவடிப் பேரின்பத்தையும் உணரலாம் என்பர்.

*"உடம்பெனு மனைய கத்துள்*
*உள்ளமே தகளி யாக*
*மடம்படும் உணர்நெய் யட்டி*
*உயிரெனும் திரிம யக்கி*

*இடம்படு ஞானத் தீயால்*

*எரிகொள இருந்து நோக்கில்*

*கடம்பமர் காளை தாதை*

*கழலடி காண லாமே!"*

**– திருநாவுக்கரசர், திருமுறை 4**

எனச் சுடர் ஆராதனையை உடலமைப்பில் பொருத்தி ஞான வழி காட்டுகின்றார் அப்பர் பெருமான். இதொப்ப நாலாயிரத்திலும் பூதத் தாழ்வாரும் வழிகாட்டக் காணலாம். இவ்வாறு திருவிளக்கின் மூலம் ஞானப் பண்பு வளரக் காணுகின்றோம்.

மேலும், கடவுள் ஆராதனையில் நம்முடைய ஐம்புலன்களும் ஒன்றுபடும் முறையில் , நம்முடைய வழிபாட்டு முறை அமைந்திருப்பது மிகச் சிறப்புடையதாகும். ஆராதனை நடைபெறும் பொழுது சுடர் ஒளியைக் கண்ணால் காணுகின்றோம்; மணி ஒலியைக் காதால் கேட்கின்றோம்; தூபமும் மலரும், நல்கும் மணத்தை மூக்கால் நுகர்கின்றோம், படைத்த அமுதை நாவால் சுவைக்கின்றோம்; மெய்தோய விழுந்து வணங்குகின்றோம். இவ்வகைச் செயல்களால் நம்முடைய ஐம்புலன்களும் இறை உணர்வில் ஒன்றுபடக் காணுகின்றோம். இத்தகைய வழிபாட்டு முறையால் உள்ளம் தூய்மை பெற்று உயர்ந்த எண்ணங்கள் தோன்றிப் பண்பு உருவாகும் நிலை ஏற்படுகின்றது.

## அன்பும் இறை உணர்வும்

இறைவனை அன்பின் வடிவாகக் கண்டனர் தமிழர்கள்; உயிர்கள் உய்தி பெறும் பொருட்டு இறைவன் அன்புருக்கொண்டு எளியவனாக, வந்து நமக்கு வழிகாட்டுகிறான் என்பர். அன்பும் சிவமும் இரண்டல்ல ஒன்றே என உரைத்து அவனால் படைக்கப்பட்ட விலங்கினங்களையும் அவனுக்கு வாகனமாக்கி அவற்றையும் வழிபாடு செய்ய வழிவகுத்தனர். இவ் வழிபாட்டு முறையால் பிற உயிர்களிடத்தும் அன்பு செலுத்தும் பண்பு

உருவாயிற்று. மேலும் இறைவன்முன், உயர்ந்தவர்-தாழ்ந்தவர், செல்வர் ஏழை, என வேறுபாடின்றிச் சமமாகக் கருதும் நெறியை ஏற்படுத்தினர். இவ்வகையில் அன்பாகிய பண்பைப் பெருக்கி நிற்பது ஆலயம் எனலாம்.

## கலை உணர்வும் தொண்டுணர்வும்

கலைகள் பலவற்றிற்கும் இருப்பிடமாகத் திகழ்வது நம் திருக்கோயில்களாகும்; அவற்றைக் கலைவளர்க்கும் பண்ணை என்றே கூறலாம். உணர்ச்சிகளின் வெளியீடாகிய நுண்கலைகள் அழியாவண்ணம் காத்து வருகின்றன நம் கோயில்கள், தேவாரமும், வேதமும், நாலாயிரமும் தெய்வ உணர்வைப் பெருக்குகின்றன, சித்திரம், சிற்பம், இசை உணர்வை அளிக்கின்றன. மேலும், மலர்மாலை, சந்தனம், குங்குமம் முதலிய அலங்காரப் பொருள்கள் தயாரிக்குமிடமாகவும் திகழ்கின்றன கோயில்கள். கொத்து, தச்சு, கல்தச்சு, கன்னார், கொல்லர், தட்டார் முதலிய கைவினைக் கலைஞர்களையும், நாதசுரம், மத்தளம், வேதம், தேவாரம், நாலாயிரம்,ஆகமம், ஆச்சாரியம் முதலிய கலை வல்லுநர்களையும் வளர்க்கும் செவிலித்தாயாகவும் கோயில்கள் திகழக்காணலாம்; திருவிழாக் காலங்களில் பல்வேறுபட்ட கலைவாணர்களுக்கும், பணியாளர்களுக்கும், ஊதியம், உணவு முதலிய வழங்கி அறம்புரிகின்றன. எளியவர்களுக்குச் சோறிடுவதைப் பூசைவகைகளுள் ஒன்றாகக் கருதினர். இச்செயலும் அறமாகக் கருதப்பெற்றது. மேலும், பழங்காலத்தில் கோயில், நீதிமன்றமாகவும் , பயிற்றுவிக்கும் பள்ளிக்கூடமாகவும், நோய் தீர்க்கும் மருத்துவமனையாகவும், அனாதி விடுதியாகவும், சேமநிதியின் நிலையமாகவும் மற்றும் நலம்பயக்கும் மன்றமாகவும், போர்க்காலங்களில் படை வீடாகவும், இன்னபிறவாகவும் விளங்கி மக்கள் சமுதாயத்திற்குப் பயன்பட்டு, ஒப்புரவுப் பண்பைக் காக்கும் நிலையமாகத் திகழ்ந்ததை நாம் கல்வெட்டுக்களின் மூலம் நன்கறியலாம்.

இவ்வாறு, இறைநிலையை உணர்த்தி, அன்பைப்பெருக்கி அறத்தைப் புகுத்தி, கலையை வளர்த்து, தொண்டு பல ஆற்றும் வழியை வகுத்து. அருள் வழங்கும் ஞானப் பண்புகளை நமக்குத் தருதலால், நம் தமிழகத்தின் திருக்கோயில்கள் பண்பாட்டின் சின்னங்கள் என்றே கூறலாம்.

# நெறி விளக்கம்

**(உதவும் நெறி)**

மலர்கள் மலர்கின்றன; மணம் வீசுகின்றன; மணம் மக்களுக்குப் பயன்படுகின்றது; தென்றல் வீசுகின்றது; நல்ல மணத்தை ஏந்திச் சென்று பிறருக்கு வழங்குகின்றது. மேகம் மழையைப் பொழிகின்றது. அம்மழைநீர் பெருகி நதியாக ஓடி மக்களுக்கு நலம் விளைவிக்கின்றது. சிக்கி முக்கிக் கற்களை எடுத்து ஒன்றினோடு ஒன்றைத் தட்ட அதனின்றும் நெருப்பு வெளியாகின்றது. நெருப்பு மனிதனுக்குப் பயன்படுகின்றது. இவ்வாறு நிலம்-நீர்-காற்று-நெருப்பு, முதலிய இயற்கைப் பொருள்கள் தத்தம் வளத்தை மக்களுக்குக் கொடுத்து உதவக் காணுகின்றோம். அதிலும் ஆறறிவு படைத்த மனிதன் பிறருக்கு உதவுதலைக் கடமையாகக் கொள்ள வேண்டும்.

இவ்வுலகத்திலே பிறந்தார் யாராயினும், எத்தேசத்தினராயினும், துன்புற்றபோது, அதனைக் கண்டு ஒதுங்குதல் பண்பாகாது. அவர்கள் துன்பத்தினைத் துடைக்க முயற்சி செய்ய வேண்டும். தன்னால் இயன்றவரை

உதவவேண்டும். மழையினைப் போல் உதவவேண்டும். மரம் காய்த்துப் பழுத்துப் பயன்தருவது போல் உதவ வேண்டும். நோயினை நீக்குவது மருந்தாகும்; அம்மருந்தை நல்கும் மரத்தினைப் போன்று உதவ வேண்டும். இவ்வாறு, உதவி செய்தலைத் தான் திருவள்ளுவர் 'ஒப்புரவு' எனக் கூறுவார்.

ஒரு மனிதன் உண்டு உயிர் வாழலாம்; ஆனால் அவனிடத்தில் பிறருக்கு உதவி செய்யும் பண்பு இல்லாவிட்டால் அவனை இறந்த மனிதர்களோடு சேர்த்துவிட வேண்டும். அவன் இவ்வுலகில் மனிதனாக உயிர் வாழ்ந்தாலும் இறந்தவன் ஆவான். பிறருக்கு உதவும் பண்பினை உடையவன் தான் உயிர் வாழ்பவன் என்று கூறுகின்றார் திருவள்ளுவர்.

*'ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்*
*செத்தாருள் வைக்கப் படும்'* – (214)

என்பது திருக்குறளாகும்.

இவ்வாறு உதவும் பண்பினை அடிப்படையாகக் கொண்டு தான் தமிழகத்தில் நம் முன்னோர்கள் அன்னச் சத்திரங்களை உண்டாக்கினார்கள்; பெரிய பெரிய திருக்கோயில்களையும், திருக்குளங்களையும் உண்டாக்கினார்கள்; மலர்ச்சோலைகள் வளர்த்தார்கள்; வைத்திய சாலைகளைக் கட்டினார்கள்.; கல்வி நிலையங்களைக் கட்டினார்கள். வழிப் பாதையில் நடந்து செல்வார்க்கு நிழல்தரும் மரங்களை நட்டார்கள்; தண்ணீர்ப்பந்தல்களை ஏற்படுத்தினார்கள். அறத்தால் உதவ அவர்கள் மனம் அன்பால் கனிந்தது. அன்புணர்ச்சி பெருக்கெடுத்தது. வேற்று நாட்டவர்.பாலும் அன்பு செலுத்தினார்கள். அவர்களுக்கும் தங்களால் இயன்ற உதவிகளைச் செய்ய முற்பட்டனர். இதனை "மனித சமுதாயம் ஒப்புரவினால் மேம்பாடு அடைந்து வருகின்றது; சமூகங்கள் நிலைத்து நிற்கின்றன. முன்னேற்றம் பெறச் செய்யும் சக்தி உதவி செய்யும் அன்பேயாகும்.. நன்மையும் அறியாமல் மனித சமுதாயத்திலுள்ள இந்த ஒப்புரவு வேலை இயற்கையில் நடந்துகொர்ண்டேயிருக்கின்ற. இந்த அன்புமுறை பெருக வேண்டும்; சமூகப் பிணைப்பு ஏற்படவேண்டும்; உலகம் முழுவதும், ஒரு பெரிய குடும்பமாக ஆகவேண்டும்."

இவ்வாறு யங் இந்தியா பத்திரிகையின் மூலம் காந்தியடிகள் நமக்கு அறிவுறுத்தினார்கள்.

மேலும், உலகில் நாம் செய்யும் உதவிகளைப் பற்றின்றிச் செய்ய வேண்டும்; பயன்கருதாது செய்ய வேண்டும்; அவ்வாறு செய்யும் உதவிகள் உலக நன்மையின் பொருட்டுச் செய்யும் உதவிகளாகும். இத்தகைய பற்றற்ற தொண்டே மனிதனை மிக உயர்ந்த இறைநிலைக்கு உயர்த்துகின்றது எனக் கர்மயோகத்தில் கீதை கூறக் காணலாம்.

பொதுவாக உலகில் வெந்த சோற்றைத் தின்று விதி வந்த காலத்து இறக்கும் வாழ்வு வாழ்வாகாது. உதவும் நெறிக்கு எடுத்துக்காட்டாக வாழும் வாழ்வே வாழ்வாகும். ஒரு மனிதன் செல்வச் சிறப்போடு வாழலாம்; செல்வாக்கோடு வாழலாம்; ஆனால் பலருக்கும் உதவும் பண்பினனாக வாழ்ந்தான் என்ற ஊரார் சொல்லுக்கு உரியவனாக வாழும் நெறியே மிக உயர்ந்த நெறியாகும். வாழ்க உதவும் நெறி!

## தோழமை நெறி

இமயமலையில் கங்கை பிறந்து, பெருகி நதியாக ஓடுகின்றது; வடபகுதியில் வாழும் பல்வேறு மக்களுக்கு அது வளத்தையும் நன்மையையும் வழங்குகின்றது. தென்பகுதியில் குடகு நாட்டில் சையமலையில் காவிரி நதி பிறந்து, பல்கி மக்களுக்கு வளத்தையும் நன்மையையும் வாரிக் கொடுக்கின்றது. இடைப் பகுதியிலோ நருமதையும், கோதாவரியும், கிருஷ்ணாவும் அவ்வாறே நன்மை பயக்கின்றன. இவ்வாறு ஆறுகள் வெவ்வேறு பகுதிகளில் ஓடினாலும், தன்னுடைய நீரின் வளத்தால் நலத்தையும் நாகரிகத்தையும் அப்பகுதிகளில் வளர்க்கின்றன. ஆறுகள் பல ஆனாலும் மக்களுக்கு நலம் பயக்கும் அதன் தன்மையை நாம் அறிகின்றோம். இதுபோல், மக்கள் வெவ்வேறு நாட்டினராக இருக்கலாம். அவர்கள் வெவ்வேறு குலத்தினராக இருக்கலாம். அவர்கள் தம் பழக்க வழக்கங்கள் மாறுபட்டிருக்கலாம். அவர்கள் தம் தொழில்கள் வெவ்வேறு வகையினதாக இருக்கலாம். அவர்கள் தம் மொழிகள் பற்பலவாக இருக்கலாம். ஆனால் மக்களுக்கு நன்மை பயக்க வேண்டும் என்ற தொண்டில் ஒத்த உணர்ச்சி உடையவர்களாக ஒன்றுபட வேண்டும்.

ஆறுகளைப் போன்று வெவ்வேறு நிலையினை அடைந்திருந்தாலும் இவ்வாறுகளைப் போன்றே நலம் செய்யும் தொண்டுள்ளம் படைத்தவர்களாக ஒன்றுபடவேண்டும். இவ்வாறு தொண்டுள்ளமும், ஒன்றுபட்ட உணர்ச்சியும் நிறைந்தவர்களிடத்தில் தான் தோழமை நெறி பிறக்கின்றது என்பார் திருவள்ளுவர். இத்தோழமை நெறியால் ஒன்றுபட்டவர்கள் அன்புள்ளம் படைத்தவர்களாக இருப்பார்கள். அவர்கள் முகத்தோடு முகம் கண்டு பேசிப் பின் மறக்கும் உணர்ச்சி உடையவர்கள் இல்லை. நெஞ்சம் கலந்த நட்பினர்களாக வாழ்வார்கள். பயன்கருதாது மக்கள் துன்புறுங்காலத்து, உடனிருந்து உதவி செய்வார்கள்; வேறுபாடின்றி, உதவி செய்வார்கள். இவ்வாறு தொண்டுள்ளமும் ஒன்றுபட்ட உணர்ச்சியும் நிறைந்தவர்களிடையே தான் நட்புறவு கொலுவீற்றிருந்து மிக சிறந்த நன்மையை நல்குகின்றது எனக் கூறுவார் திருவள்ளுவர்.

*'நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி*
*ஒல்லுவாய் ஊன்றும் நிலை'* – (கு-789)

என்பது திருக்குறளாகும்.

மேலும் அறிவுடைய நூல்கள் பலவற்றைக் கற்கலாம் அந்த நூல்கள் கற்குந்தோறும் கற்பாருக்கு அறியாமையை விலக்குகின்றது; இனிமையைப் பயக்கின்றது; அறிவைக் கொடுத்து இன்பத்தை அடையச் செய்கின்றது; அதுபோலத் தோழமை நெறி படைத்தவர்கள் உண்மையில் இனிமையுடையவர்கள்; நன்மை செய்ய வேண்டும் என்ற பண்பு படைத்தவர்கள்; அவர்களோடு நாம் பழகப் பழக அவர்கள் நமக்கு நன்மைகள் பலவற்றைச் செய்து இன்புறுத்துவார்கள். அவர்களுடைய தோழமை நெறி சக்திவாய்ந்த ஒன்றாகும் இதை,

*நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்*
*பண்புடை யாளர் தொடர்பு* – (கு-783)

என்றே திருவள்ளுவர் கூறுவார்.

இத்தகைய சிறந்த நட்பின் தத்துவத்தை இனிப்பு உருண்டை போல இரண்டு வரிகளில் கூறுவார் புறநானூற்றில் கனியன் பூங்குன்றனார்.

வாழ்க்கையில் எனக்குப் பகைமை உணர்ச்சியே இல்லை. ஆகவே எல்லா ஊர்களும் என்னுடைய ஊர்கள்தாம்; பகை உணர்ச்சி இல்லாததனால் பகைவர்கள் இல்லை. அதனால் எல்லா மக்களும் எனக்கு உறவினர்களே! பொதுவாக ஒருவருக்குத் தீமையும், நன்மையும் பிறர் தருவதில் உண்டாவதில்லை; தன் செயலாலே வருவனவாகும். இதன்

*'யாதும் ஊரே யாவரும் கேளிர்,*

*தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்பர்* – புறம்: 192

இவ்வாறு அமையும் தோழமை நெறிதான் உணவுப் பொருளில் நன்மை செய்யும் உயிர்ச்சத்துப் போன்று, மனித சமுதாயத்திற்கு நன்மை செய்யும்; உலக ஒருமைப் பாட்டை வளர்க்கும்; வீட்டுறவையும் நாட்டுறவையும் வேறின்றிப் பிணைக்கும். அன்பு செறிந்த காப்புணர்ச்சியும் ஆகும். வாழ்க தோழமை நெறி!

## தொண்டு நெறி

உலகில் பிறந்த மனிதன் தன்னையும் தன் குடும்பத்தையும் வளர்த்துக் கொண்டு வாழ்தல் ஒருவகை; தன் குடும்பத்தோடு பிறரையும் எண்ணிச் சமுதாயத்திற்குத் தொண்டு செய்து வாழ்தல் மற்றொரு வகையாகும். முதல்வகை ஏதோ பெயரின்றித் தோன்றியபின் மறைதலாகிய செயலைக் காட்டும். அடுத்தவகை தோன்றிய மனிதன் நிலைத்த புகழையும் பொற்று வாழ்தலாகிய செயலைக் காட்டும்.

இவ்விரண்டில் இரண்டாம் வகையே மிகச்சிறந்த பயனுடைய வாழ்க்கையாகும். புகழைப் பெற்று வாழ்தலாகிய வாழ்க்கையாகும். சமுதாயத்திற்குத் தொண்டு செய்து வாழும் வாழ்வுதான் நிலைத்த புகழைக் கொடுக்கும். மனிதன் மறைந்த பின்னும் அழியாமல் நிலைக்கக் கூடிய ஒரு பொருளுமாகும்;

அதனால், அது, வேறு எப்பொருளோடும் ஒப்பிடமுடியாத, அழியாத ஒப்பற்ற உயர்ந்த பொருளுமாகும் எனக் கூறுவார் திருவள்ளுவர்.

*'ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லா*
*பொன்றாது நிற்பதொன்று இல்* – (கு-223)

என்பது திருக்குறளாகும்.

உலகில் செடி கொடிகள் நமக்குக் காய் கறிகளைத் தருகின்றன; மலர்களைத் தருகின்றன. மலர்கள் தேனைத் தருகின்றன. பசுவினமும், ஆடுகளும் பாலைத் தருகின்றன. இவ்வாறு இயற்கைப் பொருள்களும், விலங்கினமும், தங்கள் தங்களிடமுள்ளவற்றைப் பிறருக்குக் கொடுத்து இவ்வுலகிற்குத் தொண்டு செய்கின்றன. அவ்வாறே, நாமும் நாட்டிற்கு உழைக்க வேண்டும். மனித சமுதாயத்திற்குப் பொது நலத் தொண்டு செய்ய முற்பட வேண்டும்.

இந்த உலகில் பல்வேறு செயல்கள் நிகழ்கின்றன. துன்பச் செயல்களும் நிகழ்கின்றன. நீதிக்குப் புறம்பான செயல்களும். ஒழுக்கத்திற்குச் சாவு மணி அடிக்கும் செயல்களும் நடைபெறுகின்றன. ஆனால், இச்செயல்கள் எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டு இவ்வுலகமோ நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது.

எவ்வாறு இவற்றைத் தாங்கும் சக்தி உலகுக்கு வந்தது என நாம் சிந்திப்போமேயானல், அதற்குச் சான்றோர்களின் தொண்டு நெறிதான் காரணம் என்று கூறுவார் இளம்பெருவழுதியார் என்ற சங்க காலப் புலவர். தொண்டுநெறி படைத்த சான்றோர்கள் பண்பாடு மிக்கவர்கள் தாங்கள் முடிவு செய்து ஆற்றும் தொண்டில் துன்பம் நேர்ந்தால், அவற்றைப் பொருட்படுத்தாமல் தொடர்ந்து பணி ஆற்றும் உறுதி படைத்தவர்கள்; தங்களுடைய நலத்தை விரும்ப மாட்டார்கள்; பிறரின் நன்மைக்கு, சமுதாயத்தின் நன்மைக்கு முயன்று பாடுபடுவார்கள். இவ்வாறு உலக நன்மையின் பொருட்டுத் தங்கள் உள்ளம்- உரை-செயல்

என்ற மூன்றாலும் தூய்மையோடு தொண்டு செய்வார்கள் என்பார் புறநானூற்றில் இளம்பெருவழுதியார்.

*"தமக்கென முயலா நோன்தாள்*

*பிறர்க் கென முயலுநர் உண்மையானே!"* **–புறம்: 182**

என்பது பாடலாகும். இவ்வாறு தன்னலமின்றிப் பிறர்க்கென வாழ்தலே சங்க இலக்கியம் வலியுறுத்தும்.

இதற்குத் தக்க சான்றாக, நம் கண் முன்வாழ்ந்த சான்றோர் காந்தியடிகள் ஆவார். அவர்தம் தொண்டு நெறி உலகம் அறிந்த ஒன்றாகும். அவர்தம், தொண்டைப் பற்றி, பெருமதிப் பிற்குரிய கவியரசர் இரவீந்திர நாத தாகூர் கூறுவதைக் காண்போம்.

"காந்தி வெற்றியடையும் ரக்சியம் அவருடைய ஆத்ம பலமும் ஓயாத தியாகமும்தான். பொது நலத்தொண்டு செய்யும் பல தலைவர்களுந்தான் தியாகம் செய்கிறார்கள். ஆனால் அதற்கெல்லாம் தன்னலமே காரணம். பின்னுக்குப் பலமடங்காக லாபம் பெறுவதற்காக முன்னால் போட்டு வைக்கும் மூலதனம் அவர்கள் தியாகம். காந்தியோ முற்றும் வேறுவிதமானவர். இணையற்ற தன்னலமற்ற குணம் படைத்தவர். அவர் வாழ்க்கையே தியாகமயமானது. அவர் ஜீவன் முக்தர், அவரே நாட்டின் ஆத்மா"

**(ஆதாரம் மஞ்சரி)**

என்று கூறியிருக்கிறார் தாகூர் அவர்கள்.

ஆக, இத்தகைய தொண்டின் உருவமாய்த் திகழ்ந்த காந்தியடிகள் போன்ற சான்றோர்களின் தன்னலமற்ற தொண்டு நெறியே உலகை வாழ்விக்கும் நெறியாகும். உலகக் கட்டுக்கோப்பைப் பாதுகாக்கும் நெறியுமாகும். வாழ்க தொண்டு நெறி!

# இலக்கியத்தில் "வெண்ணிலா"

தமிழ் கவிஞர்கள் வாழ்வு வளம் பெற்றன; அவர்கள் தம் நெஞ்சம் மகிழ்ச்சியால் நிறைந்தன; அவர்களுடைய உள்ளத்திலே அழகுணர்ச்சி அரும்பிற்று, செடியில் அரும்பி மலரும் மல்லிகைப் பூவைப் பார்த்தான் கவிஞன்; அதன் நறுமணத்தில் மயங்கி நின்றான். மகிழ்ச்சியில் தோகையை விரித்தாடும் மயிலைப் பார்த்தான் கவிஞன்; அக்காட்சியில் உள்ளத்தைப் பறிகொடுத்தான்; மங்கையின் பார்வையில் மட்டிலா இன்பம் கொண்டவன் கவிஞன்; அவ்விழிப் பார்வை பாடலைத் தோற்றுவித்தது.

கதிரின் வெம்மையும் திங்களின் குளிர்ச்சியும் அவனுக்குத் துணை செய்தன இவ்வாறு கண்டு உணர்ந்தும் அனுபவித்த அனுபவங்கள் கவிஞனது உள்ளத்தைத் தொட்டன; அழகால் உள்ளம் நிறைந்தது; அறிவு துலங்கிற்று: இலக்கிய உணர்வு அவனது உள்ளத்தே பிறந்தது; அவ்வுணர்வு பாடலாக மலர்ந்தது; மணம் பரப்பியது; அவன் கூறும் சொற்களில் அழகுணர்ச்சியும், கற்பனையும் கலக்கவே அவனிடமிருந்து பிறக்கும் தமிழ்மொழி

மேலும் இலக்கிய வல்லமையைப் பெற்றது. இவ்வகையில், இயற்கையில் தோய்ந்த கவிஞன், தான் எண்ணியவற்றைப் பிறர்க்கு எடுத்துச் சொல்வதற்கு கற்பனையைக் கருவியாகக் கொண்டான். அவன் எண்ணத்தில் உதித்த கற்பனை அவன் கருத்ததைப் பிறர்க்கு நன்கு உணர்த்தியது; அவன் எண்ணத்திற்கு நல்ல வடிவத்தினைக் கொடுத்தது; உணர்வின்பத்தை நல்கியது; புதுமையை இன்பம் பொங்கி எழச் செய்தது; அறிவினைத் திருத்தி வழிகாட்டியது.

இவ்வாறு கவிஞன் கவிதையைப் படைக்கும்பொழுது, அவனுக்கு உற்ற துணையாக நிற்கும் கற்பனையை அவனும் போற்றிக் கையாளத்தொடங்கினான். கவிஞன் தான் கண்ட இயற்கைப் பொருள்களை வைத்துக்கொண்டு, தன் கருத்ததைக் கற்பனை கலந்த பாடல்களாக வடித்தான். அப்பாடல்கள் இலக்கியப் பாடல்களாக வடிவம் பெற்றுத் திகழ்ந்தன. இவ்வகையில் தமிழிலக்கியங்கள் தோன்றிப் புகழ்பெற்றன.

தமிழ் இலக்கியத்தில் கவிஞர்கள் பல்வேறு இயற்கைப் பொருள்களைக் கையண்டனர். அவற்றுள் மிகவும் விரும்பிப் போற்றியபொருள் வெண்ணிலாவாகும். வெண்ணிலாவைக் குழந்தைகளும் விரும்பினர்; பெண்களும் விரும்பினர்; கவிஞர்களும் அதன் அழகில் மயங்கினர்; தங்கள் கருத்துக்களை அதன் மேல் ஏற்றிமொழிந்தனர்.

ஒருசில கவிஞர்கள் வீர உணர்வை வெளிப்படுத்த அதனைக் கையாண்டனர். வேறு சிலர் அக உணர்வை வெளிப்படுத்தக் கையாண்டனர். ஆக, நிலவை வைத்துக்கொண்டு கவிஞர்கள வெளியிட்ட பாடல்கள் சிலவற்றை நாம் பார்ப்போம்.

முத்தொள்ளாயிரத்தில் வெண் திங்களை வைத்துக்கொண்டு வீர உணர்வை வெளியிடுகின்றார் கவிஞர். வெண்ணிலாவை வெண்கொற்றக் குடைக்கு உவமை சொல்வது இலக்கியமரபு. சேரனது யானைப்படை வலிமை மிக்கது. போரில் மாற்றரசரது வெண்கொற்றக் குடையைத் தூக்கி எறிந்து பழகிய பழக்கத்தால், எதிரில் வேறு குடையைக் காணாது, மேல் நோக்கி முழுநிலவைப் பார்த்து மாற்றார் வெண்கொற்றக் குடை எனக் கருதித் தன் துதிக்கையை நீட்டியது என்று கூறுகின்றார் கவிஞர்.

*வீறுசால் மன்னர்*

*விரிதாம வெண்குடையைப்*

*பாற எறிந்த*

*பரிசயத்தால் - தேறாது*

*செங்கண்மாக் கோதை*

*சினவெங் களியானை*

*திங்கள்மேல் நீட்டுந்தன் கை!*

**- முத்தொள்ளாயிரம்: 19**

என்பது பாடல். யானை, முழுநிலவை நோக்கிச் சினத்தோடு தன் துதிக்கையை நீட்டிற்று என்று கூறுவதின் மூலம் வீர உணர்வு வெளிப்பட வைக்கின்றார் கவிஞர்.

அடுத்து, கலிங்கத்துப்பரணியில் அக உணர்வுப்பாடல் ஒன்றைப் பார்ப்போம். நிலவு பொழிகின்றது; பால் போலத் தன் கதிர்களைப் பரப்புகின்றது. காதலர்கள் காதலில் மயங்கியிருக்கின்றனர்; மயக்க நிலையிலிருந்த பெண்கள் பால் நிலவைத் துகில் என்று எண்ணியதனைப் பற்றக் கையை நீட்டுகின்றார்கள். இதனை,

*"கலவிக் களியின் மயக்கத்தாற்*

*கலைபோய் அகலக் கலைமதியின்*

*நிலவைத் துகிலென் றெடுத்துடுப்பீர்*

*நீள்பொற் கபாடந் திறமினோ!"*

**- கலிங்கத்துப்பரணி, கடைதிறப்பு: பா.எ.34**

என்று கூறுகின்றார். காதலர்களின் காதல் மயக்கத்தே தோன்றும் அக உணர்வை, நிலவின் ஒளியை துகிலாக இவர்கள் எண்ணினர் என்பதன் மூலம் வெளிப்படுத்துகின்றார் கவிஞர்.

அடுத்து, இராம காதையில் கம்பர் காட்டும் மங்களக் காட்சி ஒன்றைப் பார்ப்போம், மிதிலைக்காட்சிப் படலத்தில், நிலவை

வெள்ளிக் கும்பமாகக் கற்பனை செய்கிறார் கம்பர். கோலமிட்டுப் பூர்ண கும்பம் வைத்தலை நாம் பார்த்திருக்கிறோம். அது போல வானகத்தில் கோலமிட்டுப் பூர்ண கும்பம் திகழ்வதைக் காட்டுகின்றார். வானத்தில் மீன்களாகிய புள்ளிக் குறிகள் இடப்பட்டுள்ளன. அதன் நடுவில் நிலவாகிய வெள்ளிக்கும்பம் வைக்கப்பட்டுள்ளது .இருளைத் தின்று நன்கு ஒளிவிடுகின்றன நிலாக் கற்றைகள், அக்கதிர்களாகிய பாக்குமரத்துப் பாளைகள் கும்பத்தில் வைக்கப்பட்டுள்ளன. இக்காட்சி பூர்ண கும்பம் வைத்திருப்பதாகத் தோன்றுகிறதல்லவா! இதனை கம்பர்,

*புள்ளிக் குறி இட் டெனஒள்மீன்*
*பூத்த வானம் பொலிகங்குல்*
*நள்ளில் சிறந்த இருட்பிழம்பை*
*நக்கி நிமிரும் நிலாக்கற்றை*
*கிள்ளைக் கிளவிக்கு என்னாம்கொல்*
*கீழ்ப்பால் திசையின் மிசைவைத்த*
*வெள்ளிக் கும்பத்து இளங்கமுகின்*
*பாளை போன்று விரிந்துளதால்!*

எனறு பாடுகின்றார். மிதிலையில் இராமன் முனிவரோடு செல்கின்றான். கன்னி மாடத்தில் சீதை நிற்கின்றாள். இருவர் கண்களும் சந்திக்கின்றன. இருவர் கண்களும் ஒன்றை ஒன்று கவ்வுகின்றன. இருவர் உள்ளமும் மாறி ஒன்றாயின. அன்று இரவு காதல் நோய் இருவரையும் பற்றிக் கொள்கின்றது. காதல் நோயால் இராமன் தனித்து வாடுகின்றான்; சீதையும் தனித்து வாடுகின்றாள். இந்த நிலையில் வானத்தே வெண் திங்கள் பொலிவோடு உதயமாகின்றது. காதல் நோயால் வாடும் இவர்கள் வாழ்வில், துன்பம் அகன்று விரைவில் திருமண நிகழ்வு ஏற்படப் போகின்றது என்ற குறிப்பினை, முழு நிலவை வெள்ளிக் கும்பமாககற்பனை செய்து மங்கலக் காட்சியாகக் காட்டுவதின் மூலம் வெளியிடுகின்றார் கம்பர் பெருமான்.

அவர் காட்டும் வேறொரு சித்திரத்தைப் பார்ப்போம். இராமன் முடிசூடும் நாள் குறிப்பிடப்பட்டது; வேலைகள்

தொடங்கி விட்டன. ஆனால், முதல்நாள் இரவில் நிலைமை மாறிவிட்டது. இராமனும் விதிமுன் செல்ல வெண் கொற்றக் குடையின்றிக் கானகம் செல்கின்றான்; அடுத்து அவனைத் தொடர்ந்து சீதையும் செல்கின்றாள்; இருவரின் அடிபோற்றி இலக்குவனும் பின்தொடர்கின்றான். எங்கு நோக்கினும் துக்கத்தின் சாயல் படர்ந்திருக்கின்றது. இந்த நிலையில், நடு இரவில், வானகத்தில் நிலவு தன் கதிர் ஒளியை நன்கு பரப்பி உதயமாகின்றது. அக்கதிரொளி வெண்மையாக பூரிப்பாக ஒளிவிடுகின்றது. இக்காட்சி கம்பனின் சிந்தனையைத் தூண்டிற்கு; அச்சிந்தனையோடு கற்பனை கலந்தது; இனிக்கும் பாடல் ஒன்று பிறந்தது. உலகம் துக்க நிலையில் இருந்தாலும், தருமம் மட்டும் மகிழ்ச்சியடைந்த்தாம். தன் உயிர் நிலையைத் தாக்கும் கொடிய பாவத்தை, அதாவது அரக்கர்களின் தீமையை அழித்து தன்னைக் காக்க வல்லவர்கள் இராம இலக்குமணர்கள் ஆவார்கள். அவர்கள் அச்செயலைச் செயற்படுத்துவதற்கு முதல் படியாகக் கானகத்திற்கு வருகிறார்களாம் அவர்கள் வருகையை ஏற்படுத்தியது நல்வினை தானாம்! ஆகவே கூடிவரும் நல்வினையை எண்ணி மகிழ்ந்ததாம் தரும தேவதை. மகிழ்ச்சி தோன்றிய தரும தேவதையின் முகம் போல, வானில் திங்கள் தன் ஒப்பற்ற வெண்ணிற ஒளியைப் பாய்ச்சி உதயமாகின்றது என்று கூறுகின்றார் கம்பர். இதனை,

*மருமத்துத் தன்னை ஊன்றும்*
*மறக்கொடும் பாவம் தீர்க்கும்*
*உரும் ஒத்த சிலைவி னோரை*
*ஒருப்படுத்து உதவி நின்ற*
*கருமத்தின் விளைவை எண்ணிக்*
*களிப்பொடு காண வந்த*
*தருமத்தின் வதனம் என்னப்*
*பொலிந்தது தனிவெண் திங்கள்!*

என்று நிலவுக் காட்சியைக் கமபர் சித்தரிக்கும் அழகே அழகு!

அடுத்து, மகாகவி பாரதியார் வெண்ணிலாவைத் தீவாகக் காணுகின்றார். அத்தீவு எல்லையில்லாத இன்பத்தி அளிக்கின்றதாம். எவ்வாறு கள் போன்ற மயக்க உணர்வை அளிக்கும் நல் இசைப்பாடலால் நெஞ்சம் மயங்கி அமைதி அடைகின்றதோ அவ்வாறே நிலவுபொழியும் கதிர்கள் மயக்குகின்றதாம். மேலும், அவ்வொளி அமிழ்தம்போன்று நம்மைக் குளிர்வித்து அதில் முழுகச் செய்து இன்பத்தைக் கொட்டுகின்றது என்றும் கூறுகின்றார். இதனை

*எல்லை யில்லாததோர் வானக் கடலிடை*

*வெண்ணிலாவே! -விழிக்*

*கின்பம் அளிப்பதோர் தீவென்றுஇ லகுவை*

*வெண்ணிலாவே!*

*சொல்லையும் கள்ளையும் நெஞ்சையும் சேர்த்திங்கு*

*வெண்ணிலாவே! -நின்றன்*

*சோதிமயக்கும் வகையதுதான் என்சொல்*

*வெண்ணிலாவே!*

*நல்ல ஒளியின் வகைபல கண்டிலன்*

*வெண்ணிலாவே!- இந்த*

*நனவை மறந்திடச் செய்வது துண்டிலன்*

*வெண்ணிலாவே*

*கொல்லும் அமிழ்தத்தை நிகர்த்திடுங் கள்ளொன்று*

*வெண்ணிலாவே! -வந்து*

*கூடியிருக்குது நின்னொளி யோடிங்கு*

*வெண்ணிலாவே!*

என்று கூறுகின்றார்.

மேலும், பாற்கடலில் இலக்குமியோடு பிறந்தது வெண்ணிலா என்றும் அந்த நிலவுகாட்டும் நல்லநிறம் பராசக்தியின் தோற்றம் என்றும், சிவபெருமான் திருச்சடையில் கங்கையோடு வீற்றிருந்து

அழகு செய்வது வெண்ணிலா என்றும் கூறுகின்றார். அந்த நிலா வானத்தில் மேகத்தைத் த்ழுவிச் செல்வது, தீதுபுரிந்திட வருவாரையும், அணைத்துக் கொண்டு நல்வழிப்படுத்தும் செயல் போன்றது என்பதை,.

*தீது புரிந்திட வந்திடும் தீயர்க்கும்*

*வெண்ணிலாவே -நலஞ்*

*செய்தொளி நல்குவர் மேலவ ராம் அன்றோ!*

*வெண்ணிலாவே!*

என்று வெண்ணிலாவின் பெருமையைப் பலபடப் பாடிப் போற்றுகின்றார் மகாகவி பாரதியார்.

அடுத்து, கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை அவர்கள் வெண்ணிலாவை,

*'மீன்கள்கோடி கோடிசூழ வெண்ணிலாவே!—ஒரு*

*வெள்ளிஓடம் போலவரும் வெண்ணிலாவே!*

*என்று வெள்ளி ஓடமாகவும்,*

*பந்தடிப் போம் உன்னையின்று வெண்ணிலாவே!-நீயும்*
*பாரில்வர அஞ்சினையோ? வெண்ணிலாவே!*

-என்று முழுநிலவைப் பந்தாகவும் கண்டு களிக்கின்றார்

பாரதிதாசன் வெண்ணிலாவை, வானகத்தில் விட்டெறிந்த வெள்ளித்தட்டாகவும், கதிரறுக்கும் அரிவாள் ஆகவும் கண்டு நம்மையும் களிக்க வைக்கின்றார்.

இவ்வாறு கவிஞர்தம் கற்பனைக்கு ஏற்ற இயற்கைக் கருப்பொருளாகவும், காதலர்களுக்கு நன்மை பயக்கும் அமுத ஊற்றாகவும். பிரிந்த காதலர்களுக்கு வருத்தமூட்டும் தீச்சுடர் ஆகவும், நமக்கெல்லாம் ஒளி ஊட்டும் ஒளி விளக்காகவும், வெண்ணிலா விளங்கக் காணலாம். இதனால்தான் இளங்கோவடிகள் "திங்களைப் போற்றுதும்; திங்களைப்போற்றுதும்'' -என்றே மங்கள வாழ்த்துப் பாடுகின்றார்.

# தமிழில் குழந்தை இலக்கியத்தின் அண்மைக் கால வளர்ச்சி

கவிஞன் உலகைக் காண்கின்றான்; இயற்கையின் இன்பத்தில் ஈடுபடுகின்றான்; அழகுணர்ச்சியில் ஆழ்கின்றான்; அனுபவ அமுதத்தை அடைகின்றான்; இவ்வாறு தான் அடைந்த அனுபவத்தை- அறிதிறனைப் பிறரும் அடையவேண்டும் என்று எண்ணுகின்றான்; அதனை அவன் அறிந்த மொழியில் வெளியிடுகின்றான். அவ்வெளியீடு கவிதை என்னும் கலையாக உருவப் பெறுகின்றது. இவ்வாறு உருப்பெற்ற கலைக் கருவூலங்கள் தாம் இலக்கியச் செல்வங்களாகும்.

ஒரு இலக்கியம் வெற்றிபெறக்கருத்து தெளிவு வேண்டும்; இயற்கையோடு இயைந்த கற்பனை கலந்திருக்க வேண்டும்; உணர்ச்சியும் சந்தம் தழுவிய ஒலிநயமும் ஒளிர வேண்டும்; அழகிய வடிவ அமைப்பும் வேண்டும், இத்தகைய அமைப்புக் கொண்ட இலக்கியமே வெற்றித் திரு இலக்கியம் ஆகும்.

இவ்வகை இலக்கியங்கள் தமிழில் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தோன்றின. தமிழ் இலக்கியம் வழிவழி இலக்கிய மரபினை உடையது. மரபு என்ற கவசத்தினால்தான். இலக்கியம் காக்கப்பட்டு வளர்ந்தது. மிகப்பழைய இலக்கண

நூலாகிய தொல்காப்பியத்தில் - மரபு இயலில், "மரபுநிலை திரிதல் செய்யுட்கு இல்லை"- என்ற விதி அமைந்துள்ளது. அவ்விதிவழி தமிழ் இலக்கியம், மரபினைக் கொண்டு வாழ்ந்து வருகின்றது. காலத்தால் மிகப்பழையனவாய் அமைந்த தமிழ்மொழி போற்றத்தக்க மரபை மறவாது புதிய இலக்கியம் தோன்ற வழி கண்டது. இவ்வகை ஆற்றலால் தமிழ்மொழி தன்னேரில்லாத தன்மையுடையது என்று சொல்லலாம்.

இவ்வாறு வளர்ந்துவரும் தமிழ் இலக்கியத்தின் ஒரு பகுதியாகத் தோன்றியதே குழந்தை இலக்கியமாகும்; காலத்தால் பிற்பட்டுத் தோன்றினாலும், இந்த இருபதாம் நூற்றாண்டில் தனிச் சிறப்புப் பெற்று எல்லாத்துறைகளிலும் வீறு நடை போடுவதை நாம் நன்கு அறியலாம். குழந்தை இலக்கிய தொடக்க காலத்தில், வெறும் சொற்கோவைகளைக் கொண்ட உதிரிப் பாடல்களாகவே பலராலும் பாடப்பெற்று வந்துள்ளன. எடுத்துக்காட்டாக.

*'குள்ளக் குள்ளனை*
*குண்டு வயிறனை*
*வெள்ளைக் கொம்பனை*
*விநாயகனைத் தொழு!* என்றும்,
*'நிலா நிலா ஓடிவா*
*நில்லாமல் ஓடிவா*
*மலைமேலே ஏறிவா*
*மல்லிகைப்பூ கொண்டுவா!* என்றும்
*'சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு*
*சாயக்கிளியே சாய்ந்தாடு*
*குத்துவிளக்கே சாய்ந்தாடு*
*கோயில் புறாவே சாய்ந்தாடு!* என்றும், பலகோடி தாய்மார்களின் வாய்மொழிப் பாடல்களாகவே ஒலித்தன.

பின்பு, கவியரசர் பாரதியாரிடமிருந்து அற்புதமான 'பாப்பா பாடல்' பிறந்தது. பாரதிதாசனும் அவரைப் பின்பற்றி 'இளைஞர் இலக்கியம்' என்ற நூலால் அணி செய்தனர். ஆனால், இலக்கியம் என்று சொல்லத்தக்க அளவில், குழந்தை

இலக்கியப் பாடல்களுக்கு, வடிவம் அமைத்து வளர்த்தவர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை என்றே சொல்லலாம். அவர்கள் பழந்தமிழ் மரபு வழிநின்று கற்பனை செறிந்த அழகிய வடிவமைப்பில், புதிய பாடல்கள் பலவற்றை தந்துள்ளார்கள் அவர்கள் தம் பாடல்கள் கரும்பினும் இனிய பாடல்களாகும். எடுத்துக்காட்டாக, பசுங்கிளியை நோக்கி,

*வட்ட மாயுன் கழுத்திலே*
*வான வில்லை ஆரமாய்*
*இட்ட மன்னர் யாரம்மா!*
*யான் அறியக் கூறம்மா!*
*பையப் பையப் பறந்துவா*
*பாடிப் பாடிக் களித்துவா*
*கையில் வந்தி ருக்கவா*
*கனி யருந்த ஓடிவா!*

என்ற பாடலால் உயிர்களிடத்தில் காட்டும் அன்புணர்வையும் சைக்கிள் என்ற தலைப்பில்

*ஒன்றன்பின் ஒன்றாக*
*உருளும்பை தாக்கள்பார்*
*அக்காளும் தங்கையும்போல்*
*அவைபோகும் அழகைப்பார்!*

என அக்காள், தங்கை உறவைக் காட்டும் பண்புணர்வையும், பிஞ்சு நெஞ்சத்தில் பதிக்கும் பா அழகைப் பார்க்கலாம். இத்தகைய பெருங்கவிஞர்களின் அரவணைப்பில் குழந்தை இலக்கியம் வளர்ந்தாலும், அவ்விலக்கியத்திற்கு ஒரு திருப்புமுனை அமைத்து வாழ்வு தந்தவர் குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா என்றே சொல்லலாம். அவர் தந்த திருப்புமுனை, குழந்தை இயல்பும் கவிக் கூர்மையும், ஒன்றிப் பிணைந்த ஒலிநயப் பாடல்களேயாகும்; குழந்தைகளின் இயல்பை நன்கு அறிந்து அக்குழந்தைகளின் உள்ளத்தோடு ஒன்றும் மரபுவழி பாடல்களையே பாடித்தந்தனர். அவை குழந்தைகளின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன; வெற்றியடைந்தன!

குழந்தைக் கவிஞர் தம் பாடல்களில் பல்வேறு வடிவங்களை ஒலி நயத்தோடு எளிமையாகவும், திறமையாகவும் எடுத்தாண்டுள்ளார்; குழந்தைகளின் மனத்துவம் அறிந்த அவர், பல்வேறு இயற்கைப் பொருள்களையும், உயிரினங்களையும் முன்னிலைப்படுத்தி கற்பனை மெருகேற்றிச் சந்தக்கவியில் வழங்கியுள்ளார். இவ்வாறு பல்லாண்டுகளாகத் தமது உழைப்பாலும் சிந்தனைத் திறத்தாலும் மரபுவழி உருவாக்கிய நூல்களே, 'மலரும் உள்ளம்' என்ற அவர்தம் இருகவிதைத் தொகுதிகளாகும். அதில், குழந்தை இயல்பும் கவிக் கூர்மையும் களிநடம் புரியக்காணலாம். நிலாவை நோக்கி

*"நறுக்கி எறிந்த நகத்தைப் போல*

*இருக்கும் நிலாவே!-நீ*

*நகர்ந்து நகர்ந்து போவதெங்கே*

*சொல்லு நிலாவே!"* - என்று பாடலிலும், நீதி நூல்களின் சாயல் ததும்பும்

*"நாட்டுக்கு அழகு வளமை*

*நாவுக்கு அழகு இன்சொல்*

*வீட்டுக்கு அழகு வெளிச்சம்*

*வீதிக்கு அழகு ஒழுங்கு"* - என்ற பாடலிலும், நத்தையின் ஓட்டை தண்ணீர்க் குடத்திற்கு உவமை காட்டி

*"நத்தையம்மா, நத்தையம்மா*

*எங்கே போகிறாய்?*

*அத்தை குளிக்கத் தண்ணீர்க்குடம்*

*கொண்டு போகிறேன்"* - என்ற பாடலிலும், பறவைக் கப்பலை பற்றி

*"மனிதர்தம்மை தூக்கிக் கொண்டு*

*வானத்திலே பறக்குது*

*வயிற்றுக்குள்ளே பத்திரமாய்*

*வைத்துக் கொண்டே செல்லுது??*

என்ற பாடலிலும் குழந்தையின் மன உணர்வையும் அதற்கேற்ப அமைந்து நிற்கும் கவி ஒலியையும் கண்டு மகிழலாம். உண்மையில் குழந்தைக் கவிஞர் பழகு தமிழில் குழந்தை உள்ளம் குளிரப் பாடும் அழகே அழகு!

இவ்வாறு, குழந்தைக் கவிஞர் வள்ளியப்பாவை முன் மாதிரியாகக் கொண்டு பின்பற்றிப் பாடிய கவிஞர் பெரு மக்கல் பலநூறாவர். இக்காலக் குழந்தைப் பாடல்களைப் பாடும் கவிஞர்கள் குழந்தைகளின் உள்ளம் வளர பண்பியலையும், அறிவியலையும் பல்வேறு வகையில் வலியுறுத்திப் பாடிவருகிறார்கள். இவ்வாறு பாடப்பெறும் முறை தமிழில் குழந்தை இலக்கியத்தில் அண்மைக்கால வளர்ச்சி என்றே கூறலாம். எடுத்துக்காட்டாக, முத்துப் பாடல்கள், மழலைப் பாடல்கள், மழலை விருந்து, யானை என்ன யானை மலரும் மனம், மழலை அமுது, பிள்ளைக் கவியமுது, குழந்தைப் பாடல்கள், மலரும் பூக்கள், பாப்பா பாட்டு, அன்புக் குழந்தைக்கு அறுபது பாடல்கள், அமுதம் போன்ற நூல்கள் இக்கால வளர்ச்சியை எடுத்துக்காட்டும் மைல் கற்களேயாகும்!

அடுத்து, குழந்த்தை இலக்கியத்தில் சிறுகதைப் பகுதியை பார்ப்போம்; சிறுகதை எழுதுவதற்கு நடைமுறையில் நாம் காணும் சிறு நிகழ்ச்சியே கருவாக அமையும்; தமிழகத்தில் கதை சொல்லும் முறை வழி வழி வளர்ந்த ஒரு கலையாகும். இக்கலைவழி புராணக்கதைகள் பலவற்றைக் குழந்தைகளுக்குப் பெரியவர்கள் கூறிவந்தார்கள். அதன்பின் விலங்குகளையும், தேவதைகளையும் வைத்துக் கொண்டு கதைகள் எழுதப்பட்டன. ஆனால், இக்காலத்தில் நடைமுறை நிகழ்ச்சிகள் நல்ல குறிக்கோளோடு தெளிவாக விளக்கப்படுகின்றன. உணர்வு சிதறாமல் ஒழுக்க நெறிகள் புகட்டப்படுகின்றன. இவ்வாறு உள்ளத்தே பதியுமாறு எழுதும் திறன் குழந்தைச் சிறுகதை எழுத்தாளர்களிடையே வளர்ந்தோங்கியிருப்பதை நாம் அறியலாம்.

இனி, தொடர்கதைகளை நோக்குவோம். தொடர் கதைகளில் கற்பனைச் செறிவு கலந்திருக்கவேண்டும்; கதைக்குள் கதை விரிக்கும் கலை படிந்திருக்கவேண்டும். மக்கள் வாழ்வியலில், இன்ப துன்ப நிகழ்ச்சிகளின் அனுபவங்கள் கலந்திருக்கவேண்டும். இம்மரபின்வழி சரித்திர உண்மைகளைப் பின்னணியாக வைத்தும், தியாக வாழ்வின் சிறப்புக்களைப் பின்னணியாக வைத்தும். குழந்தை எழுத்தாளர்கள் எழுதத் தொடங்கியுள்ளனர். இம்முறை போற்றுதற்குரியது. மேலும் கதையில் அமையும் உரையாடல்கள் அன்றாட உரையாடல்களைப் பின்பற்றி எளிமையாக நல்ல தமிழில் எழுதுகின்றார்கள். இம்முறை முன்னேற்ற நிலையே! மற்றும், சிறுவர் நாடகப் பகுதிகள் சிறிது

சிறிதாக முன்னேறி வருகின்றன. அறிவுப் பாடப்பகுதிகளை, பல மணிநேரம் ஆசிரியன் போதிப்பதைக் காட்டிலும், நாடகப் பகுதியில் காட்சிகளின் மூலம் காட்டுவது, குழந்தைகளின் மனதில் நன்கு பதிகின்றன என மனதத்துவ அறிஞர்கள் கூறுவர். உண்மைதானே! அரிச்சந்திர நாடகத்தைக் கண்ட காந்தியடிகளின் உள்ளத்தே, உண்மையே பேசவேண்டும் என்ற பண்பு உறுதியாகப் பதிவானது நாமெல்லாம் அறிந்ததொன்றல்லவா? அவ்வாறே, நாடகங்களின் மூலம் தெய்வபக்தி, தேசபக்தி, தன்னம்பிக்கை, விடாமுயற்சி, அறம் செய்யும் பண்புணர்ச்சி முதலியனவற்றை மிக எளிதாக உணர்த்திட முடியும். இவ்வகையில் தமிழகத்தில் வானொலி நிலையங்களும், தொலைக்காட்சி நிலையங்களும் ஆற்றும் தொண்டுகள் முன்னேற்றப் பாதைகளின் திருப்படிகளாகும்;

முடிவாக, வாழ்க்கை வரலாற்றுத்துறைப் பகுதியும் மிக நன்றாக வளர்ந்துள்ளன. வாழ்க்கை வரலாற்று நூல்கள் பல மிகச் சிறந்த முறையில் வெளிவந்துள்ளன. தன் வாழ்வை நாட்டிற்கோ, மொழிக்கோ, தியாகம் செய்த தலைவர்களின் வாழ்க்கை வரலாற்று நூல்களாகவும், ஒரு சில தலைவர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த சிறு சிறு சுவையான நிகழ்ச்சிகளைத் தொகுப்பித்த நூல்களாகவும் வெளிவந்திருப்பது பயன்படத்தக்க செயலாகும். தேசத்தலைவர்கள் விஞ்ஞானிகள், கவிஞர்கள், இசைப் பேரறிஞர்கள், தமிழ் வளர்த்த பெரியார்கள் போன்ற பெரியவர்களின் வரலாறுகள் உரைநடை வாயிலாகவும், வண்ணச்சித்திரப் படங்களின் வாயிலாகவும், வெளிவந்திருப்பது புகழ் ஏணியின் உயர்வைக் காட்டுகின்றது.

அறிவியல் துறைப் பகுதியில் விஞ்ஞான அறிவியல்களைக் கட்டுரை வாயிலாக அறிவுறுத்தும் நிலை முதலில் தொடங்கப் பெற்றது. ஆனால், அறிவியல்களைக் கதைபோல் கூறினால் குழந்தைகளின் உள்ளம் அதில் ஈடுபடும் நிலை பெருகிற்று. இப்பொழுது இத்தகைய நிலையை குழந்தை எழுத்தாளர்கள் கையாண்டு வருவதைப் பார்க்கலாம். எடுத்துக்காட்டாக, மரங்களின் கதை, இரப்பரின் கதை, பூமியைச் சுற்றும் ஆரியபட்டா முதலிய நூல்களாகும். இவ்வாறு கவிதைகளாய், சிறுகதை, தொடர்கதைகளாய் மற்றும் நாடக வரலாற்று நூல்களாய், அறிவியல் விந்தை நூல்களாய் பல்கிச்சுடர் விடும் சுடர்க் கொழுந்துகள் குழந்தை இலக்கியத்தின் ஒளிவிளக்குகளாகும்.



